

# 'ஹிஜாப்'

## அதன் அவசியம் என்ன?

கலாநிதி செய்க் முஹம்மத் பின் இஸ்மாயில்

ஆங்கில மொழிபெயர்ப்பும் விரிவுரையும்:
கலாநிதி ஸாலிஹ் அஸ்ஸாலிஹ்

தமிழில்:
எஸ்.எம். மன்சூர்

طبعت على نفقة أحد المحسنين غفر الله له ولوالديه ولجميع المسلمين

The Cooperative Office For Call & Guidance at Al-Badiah - Communities Section
Under the Supervision of the Ministry of Islamic Affairs Endowment Guidance& Propagation
P.O. Box 24932 Riyadh 11456 - Tel. 4330888/4330470 - Fax. 4301122 - Saudi Arabia

# ‘ஹிஜாப்’

## அதன் அவசியம் என்ன?

கலாநிதி செய்க் முஹம்மத் பின் இஸ்மாயில்

ஆங்கில மொழிபெயர்ப்பும் விரிவுரையும்:
கலாநிதி ஸாலிஹ் அஸ்ஸாலிஹ்

தமிழில்:
**எஸ்.எம். மன்சூர்**

வெளியீடு:
அழைப்பு, வழிகாட்டல்களுக்கான கூட்டுறவுச் செயலகம்,
அல் பதிய்யா - சனசமூகப் பிரிவு,
ரியாத், சவூதி அரேபியா.

# பொருளடக்கம்


முன்னுரை . . . . . . . . . . . . . . . . . . . . . . . . 1

ஆங்கில மொழிபெயர்ப்பாளர் முன்னுரை . . . . 5

அறிமுகம் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . 7

ஹிஜாபின் சிறப்பம்சங்கள் . . . . . . . . . . . . . 8

1 - கீழ்ப்படிவுமிக்க ஒரு செயல் . . . . . . . . . . . . . . . . 8

2 - ஹிஜாப் என்பது இஃப்ஃபாஹ் (அடக்கம், நாணம்) சார்ந்தது! . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . 10

3 - ஹிஜாப் என்பது தஹாரா (பரிசுத்தம்) சார்ந்தது! . . . . . . 11

4 - ஹிஜாப் என்பது ஒரு கேடயம்! . . . . . . . . . . . . . . . . 12

5 - ஹிஜாப் என்பது தக்வா (இறையச்சம்/ இறையன்பு) சார்ந்தது! . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . 13

6 - ஹிஜாப் என்பது ஈமான் (விசுவாசம்) சார்ந்தது! . . . . . . 13

7 - ஹிஜாப் என்பது ஹயா (நாணம்) சார்ந்தது! . . . . . . . . 14

8 - ஹிஜாப் என்பது கீராஹ் (மனக் கிளர்ச்சி) சார்ந்தது! . . . . 15

தபர்ருஜ் (பெண்களின் கவர்ச்சியைக் காட்டுவது) ஓர் அவமானம்! . . . . . . . . . . . . . . . . . . . . . 17

1 - தபர்ருஜ் என்பது அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் அடிபணியாதிருப்பதாகும்! . . . . . . . . . . . . . . . . . 17

2 - தபர்ருஜ் பயங்கர அழிவைத் தரும் பாவமாகும்! . . . . . . 18

3 - தபர்ருஜ் அல்லாஹ்வின் சாபத்தையும் அவனது கருணையிலிருந்து தூர விலகிச் செல்வதையும் கொண்டுவரும்! . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . 19

4 - தபர்ருஜ் நரகத்தவர்களது பண்பு சார்ந்ததாகும்! . . . . . . 19

5 - தபர்ருஜ் மறுமை நாளில் இருளைத் தரும்! . . . . . . . . . .20

6 - தபர்ருஜ் நிஃபாக் எனும் நயவஞ்சகமாகும்! . . . . . . . . .20

7 - தபர்ருஜ் வெட்கக் கேடானது! . . . . . . . . . . . . . . .21

8 - தபர்ருஜ் நெறி தவறியதும் வெட்கக் கேடானதுமான பாவமாகும்! . . . . . . . . . . . . . . . . . . . . . . .21

9 - தபர்ருஜ் ஷைத்தானிய வழிமுறையாகும்! . . . . . . . . . .22

10 - தபர்ருஜ் யூதர்கள் வழிமுறையாகும்! . . . . . . . . . . . .24

11 - தபர்ருஜ் அசங்கியமான ஓர் அறியாமை! . . . . . . . . . . .26

12 - தபர்ருஜ் மிருகத்தனமானது; அழிவையும் இழிவையும் பின்னேற்றத்தையும் தருவது! . . . . . . . . . . . . . . . .27

13 - தபர்ருஜ் பாவங்களை கட்டவிழ்த்துவிடும் பாதையாகும்! 28

ஹிஜாப் அணிவதற்கு அவசியமான அடிப்படை விதிகள்! . . . . . . . . . . . . . . . . . . . . . . 31

1 - உடலை முழுமையாக மறைத்தல்! . . . . . . . . . . . . . .31

2 - ஹிஜாப் ஒரு காட்சிப் பொருளாகக் கூடாது! . . . . . . . .31

3 - ஹிஜாப் மெல்லியதாக அன்றி கனமாக இருத்தல் வேண்டும்! . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .31

4 - ஹிஜாப் இறுக்கமாக அன்றி பெரிதாக, தாராளமானதாக இருக்க வேண்டும்! . . . . . . . . . . . . . . . . . . . . .32

5 - ஹிஜாபில் மணம் பூசக் கூடாது! . . . . . . . . . . . . . . .33

6 - ஹிஜாப் ஆண்களின் ஆடையை ஒத்திருக்கக் கூடாது! . . .33

7 - ஹிஜாப் காஃபிரான (முஸ்லிமல்லாத) பெண்களின் ஆடைகளை ஒத்திருக்கக் கூடாது! . . . . . . . . . . . . .34

8 - ஹிஜாப் புகழுக்காக அணிவதல்ல! . . . . . . . . . . . . .34

9 - மறைவான கவர்ச்சிக் காட்டல்! . . . . . . . . . . . . . . .35

செவியேற்போம்; கீழ்ப்படிந்து நடப்போம்! . . . 38

# முன்னுரை

'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்!' என்பது தொன்றுதொட்டு இருந்துவரும் கருத்து. உலகில் வாழ்ந்த, வாழ்ந்து கொண்டிருக்கும் எந்த மனிதனும் இது தொடர்பான மாறுபட்ட கருத்தைக் கொள்ளவில்லை!

அனைத்து மதங்களும் தீய ஆண் - பெண் உறவை, அதனால் விளையும் ஒழுக்கக் கேட்டை வன்மையாகக் கண்டிக்கின்றன; தூய ஒழுக்க வாழ்வை உயர்வாகக் கருதுகின்றன; ஆசித்து நிற்கின்றன. ஆனால், அந்தத் தூய ஒழுக்க வாழ்வை எவ்வாறு கொண்டு வருவது; பாபகரமான ஒழுக்கக் கேட்டை அடியோடு துடைத்தெறிவது எவ்வாறு என்பதற்கான வழிமுறைகளைக் காட்டித்தந்து, நடைமுறைப்படுத்திக் காண்பிக்கவில்லை - தூய இஸ்லாத்தைத் தவிர!

ஆணும் பெண்ணும் எத்தகைய வரம்புமின்றி கலந்து காரியமாற்றும் சூழலை வைத்துக்கொண்டு, ஒழுக்க வாழ்வின் உயர்வு பற்றி வானளாவப் புகழ்ந்தாலும் வரப்போவது ஒன்றுமில்லை. இன்று, பல சமூக மக்களிடையே ஆண் - பெண் உறவு சீர்கெட்டு விபச்சாரம் அரசோச்சும் அளவுக்கு வளர்ச்சி பெற இதுதான் காரணம்.

இப்பொழுது முஸ்லிம் சமுதாயத்திலும் இப்பயங்கர ஒழுக்கக் கேடு பரவும் அறிகுறிகள் ஆங்காங்கே தெரிகின்றன. காரணம், முஸ்லிம்கள் இறுக்கமான இஸ்லாமிய பிணைப்பிலிருந்து சற்று தளர்வுற்று வாழ்க்கைப் பயணத்தை மேற்கொள்ள முற்பட்டதாகும். இந்த பாதக நிலையை உருவாக்குவதில் இஸ்லாத்திற்கு எதிரான, மேற்கத்திய சடவாத சிந்தனைகளும், அவற்றின் வழியில் மூளை சலவை செய்யப்பட்ட உள்ளூர் 'லேபல்' முஸ்லிம்களும் செயற்பட்டு வருகின்றனர். இது முழு மனித சமுதாயத்தையும் மிருக வாழ்வின் பால் இழுத்துச்செல்லும் துரோகமிக்க செயலாகும்.

இஸ்லாம், மனித சமுதாயத்தில் ஒழுக்க வாழ்வைக் கொண்டுவருவது தொடர்பான, உறுதியான கருத்தையும் வழிமுறைகளையும் கொண்டுள்ளது. இந்தக் கருத்தும் வழிமுறைகளும் வெறுமனே எழுத்துக்குள் வரையறுக்கப்பட்டு நின்றுவிடவில்லை. மாறாக, நன்கு திட்டமிட்டு, நடைமுறைக்குக் கொண்டுவந்து, நல்லதொரு சமுதாயத்தையே உருவாக்கி, முழு உலகுக்கும் முன்மாதிரியாக வைத்துவிட்டது.

அந்தக் கருத்தும் வழிமுறைகளும் நான்கு கட்ட செயல்முறையைக் கொண்டிருந்தது.

முதலாவது: தீய ஆண் - பெண் உறவு மூலம் வரும் ஒழுக்கக் கேடால் இவ்வுலகில் ஏற்படும் தீமைகள் என்ன; சமூக சீரழிவு என்ன; நோய் நொம்பலங்கள் என்ன; அவமரியாதையும் அகௌரவங்களும் என்ன என்பதை எடுத்துரைக்கின்றது. அதேவேளை, இந்தப் பாவச் செயலால் மறுமையில், அல்லாஹ்வின் முன்னிலையில், அதற்கடுத்து வரும் கட்டங்களில் அடையப்போகும் துன்பங்கள், தண்டனைகள் என்ன என்பதையும் எடுத்துரைக்கின்றது. இந்த ரீதியில் ஒழுக்கக் கேடு - விபச்சாரம் - பெரும் பாவமான ஒன்று என்ற கருத்து உருவாக்கப் படுகின்றது.

இரண்டாவது: அந்நிய ஆணும் அந்நியப் பெண்ணும் எத்தகைய வரம்புமில்லாது, சர்வ சுதந்திரமாக சந்திக்கும் வாய்ப்பு வசதியுடைய சூழல் இருப்பதுதான் விபச்சாரம் உருவாவதற்குக் காரணம். எனவே, அந்தச் சூழலை மாற்றியமைக்க வழி செய்கின்றது இஸ்லாம். ஒவ்வொருவரதும் பார்வை, பேச்சு, நடத்தை எவ்வாறு அமைய வேண்டும்; ஆடை அணிகலன்கள் எப்படி இருக்க வேண்டும்; நெருங்கிய உறவினர் மத்தியில் கூட (உதாரணமாக: தந்தை - மகள், தாய் - மகன், சகோதரன் - சகோதரி) குறித்த வயதை அடைந்துவிட்டால் பேணவேண்டிய அம்சங்களும் கடைப்பிடிக்க வேண்டிய வழிகளும் என்ன என எடுத்துக் கூறி, இவற்றை நடைமுறைக்குக் கொண்டு வருகின்றது.

மூன்றாவது: மேற்கண்டவாறு ஆணையும் பெண்ணையும் பிரித்து வைத்தாலும் அவர்களது உடல் உள வளர்ச்சிக்கேற்ப ஒரு வகையான உணர்வும், ஒருவர்மேல் ஒருவர் ஆர்வமும் ஆசையும் தேவையும் கொள்ளும் தன்மையும் வளர்ந்து வருகின்றது. இவற்றை இஸ்லாம் 'வேண்டாமே!' என மறுத்துரைக்கவில்லை. மாறாக, இரு சாராரையும் இறைவன் வகுத்த வழி முறைக்கமைய நீதி வழியில் சேர்த்துவைக்க திருமணத்தை இலகுவாக்கி வைத்தது; அதற்கான ஆக்கத் திட்டங்களைத் தந்தது.

நான்காவது: மேற்காணும் அனைத்து ஏற்பாடுகளையும் மீறி எந்த ஆணும் எந்தப் பெண்ணும் தவறு செய்தால் - அவர்களை விசாரிக்க, குற்றத்திற்குத் தக்கவாறு தண்டனைத் தரவென சிறப்பான நீதித்துறையையும் அமைத்துள்ளது. பள்ளத்தாக்குகள் நிறைந்த பாதையிலே வேகமாகச் செல்லும் வாகனத்தைப் பாதுகாக்க அறிவித்தல் பலகைகள் ஆங்காங்கே இருக்கின்றன. அதேவேளை, வலுவான பெருஞ்சுவரும் எழுப்பப் பட்டுள்ளது. அறிவித்தல்களையும் மீறிச் செல்பவனைப் பாதுக்கவே இந்தப் பெருஞ்சுவர்! அப்படித்தான், இஸ்லாம் வகுத்துள்ள நீதித் துறையும், அது ஒழுக்கத்தை கட்டிக் காப்பாற்ற வகுத்துள்ள வழிகளையெல்லாம் மீறி, உடைத்துக் கொண்டு செல்பவர்களைத் தடுத்து நிறுத்தக்கூடிய வேலியாகவே அமையப் பெற்றுள்ளது.

இவ்வாறு, நல்லொழுக்கமுள்ள சமுதாயமொன்றை உருவாக்குவதில் நன்கு திட்டமிடப்பட்ட முறையொன்றை அறிமுகப்படுத்தி பின்பற்றிய இஸ்லாத்தைப் போன்ற இன்னுமொரு மதத்தை, வாழ்க்கை நெறியை நாம் காண்பது சாத்தியமில்லை.

இஸ்லாம் ஒரு வாழ்க்கை முறை. மனித வாழ்வின் அனைத்துத் துறைகளுக்கும், எல்லா விவகாரங்களுக்கும் இயற்கை சார்ந்த, நடைமுறை சாத்தியமான நல்லதொரு வழியை நமக்குத் தருகின்றது. அது மட்டுமல்ல, இஸ்லாத்தின் இந்த வழிமுறைக்கமைய ஒரு சமுதாயம் அமைக்கப் பெற்றது. இன்றும், எத்தனையோ இடர்களுக்கு மத்தியிலும்கூட ஏனைய சமுதாய மக்களிலும் பார்க்க முஸ்லிம்களிடம் உயர்ந்த ஒழுக்க விழுமியங்கள் இருக்கின்றன என்றால், அதற்கு முழுக் காரணமும் இஸ்லாமிய வழிகாட்டல்தான் என்பதை மறுக்க முடியாது.

இஸ்லாத்தின் மேற்காணும் அம்சங்களையிட்டு நாம் ஒவ்வொருவரும் கவனம் செலுத்துவது கண்டிப்பான தேவையாகும். இன்றைய மனித வாழ்வில் ஒழுக்கத்தைக் கட்டியெழுப்ப இது தவிர வேறு வழியில்லை.

உங்கள் கரங்களில் தவழும் இந்நூல், ஒழுக்கத்தைக் கட்டிக் காப்பாற்றும் வகையில் பெண்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்; எவ்வாறு ஆடை அணியவேண்டும்; அந்த வகையிலான வரையறைகள் என்ன என்பதை நன்கு தெளிவு படுத்துகின்றது. கலாநிதி செய்க் முஹம்மத் பின் இஸ்மாயில் அவர்கள் அரபியில் எழுதிய 'ஹிஜாப் நோக்கித் திரும்பிவிடல் - பகுதி 3' என்ற நூலைத் தழுவி சுருக்கமாக மொழிபெயர்த்து, அவசியமான இடங்களில் அடிக்குறிப்புகள் மூலம் ஆதாரங்களும் விளக்கங்களும் தந்துள்ளார் கலாநிதி ஸாலிஹ் அஸ் ஸாலிஹ் அவர்கள். இதனைத் தமிழில் பெயர்த்துத் தந்தவர் இலங்கையைச் சேர்ந்த சகோதரர் எஸ்.எம்.மன்சூர் அவர்கள். இவர்கள் எம் நன்றிக்குரியவர்கள்.

இந்நூலைப் படிக்கும் ஒவ்வொரு பெண்ணும் தன்னை இதன் வழியில் நெறிப்படுத்திக் கொள்ள முன்வரவேண்டும்; மற்றார்க்கும் இது பற்றி எடுத்துரைக்க வேண்டும். இது தொடர்பாக ஒரு நிமிடமேனும் காலம் தாழ்த்தக் கூடாது. இந்நூலில், இறுதிப் பக்கமொன்றில், ஹிஜாப் பற்றிய குர்ஆன் வசனம் வந்தபோது அன்ஸாரியப் பெண்கள் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதை அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் எடுத்துக் கூறுகின்றார்கள். அந்தப் பெண்களை அடியொட்டியவர்களாக வாழ்வதே சிறப்பு.

கருணைமிக்க அல்லாஹ் எம் வாழ்வை சீராக நடத்திச்சென்று சிறப்புப் பெற, ஈருலக பாக்கியங்கள் பெற இஸ்லாத்தைத் தந்துள்ளான். அதனைப் பின்பற்றாது தவறில் வீழ்ந்தால் குற்றம் எம்முடையதே அன்றி அவனுடையது அல்ல.

அவன் தூயவன்; குற்றங்களிலிருந்து விடுபட்டவன்; அவனது வழிகாட்டலும், அவன் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் முன்மாதிரியும் இன்றி எவருக்கும், என்றுமே விமோசனம் இல்லை.

*வெளியீட்டாளர்கள்.*

*ரியாத், சவூதி அரேபியா.*
*1994-09-15.*



﴿وما كانَ لمؤمنٍ ولا مؤمنةٍ إذا قضى ا الله
ورسولُه أمراً أن يكونَ لهم الخِيَرَةُ من أمرهم ومن يعصِ ا الله
ورسوله فقد ضل ضلالا مبينا ﴾

[الأحزاب، الآية ٣٦]

"அல்லாஹ்வும்
அவனுடைய தூதரும்
ஏதேனும் ஒரு விவகாரத்தில்
தீர்ப்பளித்து விட்டால்,
பிறகு
அந்த விவகாரத்தில்
சுயமாகத் தீர்ப்பளிக்கும் அதிகாரம்
இறை நம்பிக்கை கொண்டுள்ள
எந்த ஆணுக்கும்,
இறை நம்பிக்கை கொண்டுள்ள
எந்தப் பெண்ணுக்கும்
கிடையாது.
மேலும்,
எவன்
அல்லாஹ்வுக்கும்
அவனுடைய தூதருக்கும்
மாறு செய்கின்றானோ,
அவன்
வெளிப்படையான வழிகேட்டில்
வீழ்ந்து விட்டான்!."

★அல் குர்ஆன் 33:36

# ஆங்கில மொழிபெயர்ப்பாளர் முன்னுரை

بسم ا لله الرحمن الرحيم

إنَّ الحمْدَ للهِ تعالى نَحْمَدُهُ ، ونستعينُ بهِ ونَستَغْفِرُهُ ، ونعوذُ با للهِ تعالى من شـرورِ أنفُسِنا وسيِّئاتِ أعمالِنا من يهْدِهِ ا للهُ تعالى فـلا مُضِـلَّ لـه ، ومـن يُضْلِـلْ فـلا هـاديَ له.وأشهدُ أن لا إلهَ إلاّ ا للهُ وحدَهُ لا شريكَ لـه. وأشـهَدُ أنَّ محمّـداً عبـدُهُ ورَسـولُهُ، صلى ا لله عليهِ وآلِهِ وسَلَّمَ.

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பிக்கின்றேன்.

அல்லாஹ் ஒருவனுக்கே அனைத்துப் புகழும் உரித்து. நாம் அவனைப் புகழ்ந்து, அவன் உதவியையும் பாவ மன்னிப்பையும் வேண்டி நிற்கின்றோம். மிகவும் கண்ணியம் பொருந்திய அல்லாஹ்விடம் நாம் பாவங்கள், கெட்ட செயல்கள் ஆகியவற்றில் வீழ்ந்து விடுவது தொடர்பான பாதுகாப்பை நாடி நிற்கின்றோம். அல்லாஹ்வின் வழிகாட்டல் எவருக்குக் கிடைக்கின்றதோ அவரை எவரும் வழி கெடுத்துவிட முடியாது; அத்துடன், எவருக்கு அல்லாஹ்வின் வழிகாட்டல் கிடைக்கவில்லையோ அவரை எவரும் நல்வழி படுத்திடவும் முடியாது. மேலும், அல்லாஹ் ஒருவனே வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரியவன் என நான் சான்று பகர்கின்றேன்; மேலும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனின் அடிமையும் திருத்தூதரும் ஆவார்கள் எனவும் சான்று பகர்கின்றேன். அல்லாஹ், இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது மேலான குடும்பத்தவர்கள், கண்ணியம் நிறைந்த தோழர்கள் ஆகியோர் மீதும் சாந்தி சமாதானம் ஆகியவற்றை நல்குவானாக!

﴿ يا أيُّها الذينَ آمنـواْ اتَّقُـواْ ا لله حـقَّ تُقاتِـهِ ولا تَمُوتُـنَّ إلاّ وأنتُم مُسْلِمون﴾[آلِ عمران الآية ١٠٢]

*"இறை நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு (அவன் ஏவியவைகளைக் கடைப்பிடித்தும், தடுத்தவைகளை விட்டொ*

துக்கியும்) அஞ்சவேண்டிய முறைப்படி அஞ்சுங்கள். மேலும், நீங்கள் முஸ்லிம்களாக அன்றி மரணமடைய வேண்டாம்.''

*(அல் குர்ஆன் 3:102)*

﴿ يا أيُّها النَّاسُ اتَّقُوا ربَّكُمُ الّذي خَلَقَكُمْ من نفسٍ واحـدَةٍ ، وخَلَقَ مِنها زوجَها وَبَثَّ مِنْهُمَا رِجالاً كثيراً ونِساءً ، واتَّقُواْ ا للهَ الَّذي تساءَلُونَ بِهِ والأَرحامَ إنَّ ا للهَ كَانَ عليْكُم رقيبـاً ﴾

''மனிதர்களே உங்களை ஓர் ஆன்மாவிலிருந்து படைத்த உங்களின் இறைவனுக்கு நீங்கள் அஞ்சுங்கள். மேலும், அதே ஆன்மாவிலிருந்து அதனுடைய துணையை அவன் உண்டாக்கினான். மேலும், அவை இரண்டின் மூலம் (உலகில்) அதிகமான ஆண்களையும், பெண்களையும் பரவச் செய்தான். மேலும், எந்த அல்லாஹ்வின் பெயரைக் கூறி நீங்கள் ஒருவர் மற்றவரிடம் (உரிமைகளைக்) கோருகின்றீர்களோ, அந்த அல்லாஹ்வுக்கே நீங்கள் அஞ்சுங்கள். மேலும், இரத்த பந்த உறவுகளை சீர்குலைப்பதிலிருந்து நீங்கள் விலகி வாழுங்கள். திண்ணமாக அறிந்து கொள்ளுங்கள்: அல்லாஹ் உங்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான்.''

*(அல் குர்ஆன் 4:01)*

﴿ يا أيُّها الَّذين آمنواْ اتَّقُواْ ا للهَ وقولواْ قولاً سَديداً ، يُصْلِـح لكُمْ أعمالَكُم ويَغْفِرْ لَكُـمْ ذُنوبَكُـمْ ، ومـن يُطِـعِ ا للهَ ورسُـولَهُ فقدْ فازَ فَوْزاً عَظِيماً ﴾ [ الأحزاب ، الآية ٧٠، ٧١ ]

''நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். மேலும், நேர்மையான சொல்லை மொழியுங்கள். அல்லாஹ் உங்களுடைய செயல்களைச் சீர்திருத்தி விடுவான்; மேலும், உங்களுடைய குற்றங்களை மன்னிக்கவும் செய்வான். எவன் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படிகின்றானோ, அவன் மகத்தான வெற்றி அடைந்து விட்டான்.''

*(அல் குர்ஆன் 33:70,71)*

**பின்னர், அறிந்து கொள்ளுங்கள்....**

أما بعد ..

فإنَّ أصدق الحديثِ كتابُ الله تعالى ، وخَيرَ الهدي هدْيُ محمدٍ صلى الله عليه وآله وصَحْبِهِ وسلَّمَ ، وشَرَّ الأمورِ محدثاتُها ، وكُلَّ مُحْدَثَةٍ بِدعةٍ ، وكُلَّ بدعةٍ ضلالةٌ ، وكُلَّ ضلالةٍ في النار ،..

*''வசனங்களுள் மிகச் சிறந்தது இறை வசனம் (குர்ஆன்) ஆகும். வழிகாட்டல்களுள் மிகச் சிறந்தது முஹம்மத் (ஸல்) அவர்களது வழிகாட்டலாகும். தீனிலே (இஸ்லாத்திலே) மிகவும் தீய செயல்கள் (இஸ்லாத்தின் மிகச் சரியான போதனைகளுக்கு மாறான) புதிதாய்த் தோற்றுவிக்கப்படும் நூதனச் செயல் (பித்அத்)களாகும். ஒவ்வொரு நூதனச் செயலும் வழிகேடாகும். வழிகேடான ஒவ்வொன்றும் நரக நெருப்பின்பால் இழுத்துச் செல்லக்கூடியனவாகும்.''*

- முஸ்லிம்.

உங்கள் கரங்களில் தவழும் இந்நூல், ஹிஜாபின் அவசியத்தைப் பற்றி முஸ்லிம் ஆண்கள் பெண்கள் ஆகியோர்க்கு எடுத்துக்கூறும் முயற்சியின் பயனாய் உருவானதாகும்.

பல பெண்கள் இது தொடர்பாகக் கேட்கின்றார்கள். எனவே, கலாநிதி செய்க் முஹம்மத் பின் இஸ்மாயில் அவர்கள் எழுதிய 'ஹிஜாப் நோக்கித் திரும்பிவிடல் - பகுதி 3' என்ற நூலின் விரிவான விளக்கங்களை அடிப்படையாகக் கொண்டு, அதன் பல விடயங்களை சுருக்கமாகத் தரும் வகையில் இந்நூலைத் தயாரித்துள்ளேன்.

நான் அமெரிக்காவில் இருந்தபோது, பல சகோதரர்களின் தூண்டுதலுக்கிணங்க இதை அழகுற செய்துமுடிக்க அருள் பாலித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். இது தொடர்பாக எனக்கு ஆக்கமும் ஊக்கமும் வழங்கிய செய்க் முஹம்மத் பின் இஸ்மாயில் அவர்களுக்கு நன்றியுடையேன். இப்பணியில் நேரடியாகவோ மறை முகமாகவோ பங்களித்த ஒவ்வொருவரது முயற்சியையும் ஏற்று அங்கீகரித்து அருள் புரியுமாறு வல்ல அல்லாஹ்வை - அவனது சிறப்புப் பெயர்களையும் பண்புகளையும் கொண்டு வேண்டி நிற்கின்றேன்.

*அல்லாஹ்வின் கருணையை நாடி நிற்கும்,*

***கலாநிதி ஸாலிஹ் அஸ்ஸாலிஹ்.***

*ஹிஜ்ரி 1413-11-26*

*கி.பி. 1993-05-17*



# அறிமுகம்

அல்லாஹ் இப்பிரபஞ்சத்தின் ஆட்சியாளன்; தீர்ப்பு நாளின் அதிபதி; அன்பும் கருணையும் மிக்கவன்; அவனுக்கே எல்லாப் புகழும். நன்னடத்தை உடையோருக்கே நல்ல முடிவு கிடைக்கும். யார் கொடுமை மிகுந்த நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றார்களோ அவர்களுக்கன்றி, மற்றவர்க்கிடையில் பகை வராதிருக்குமாக.

யா அல்லாஹ்! உனது ஸலாத்தும்,[1] ஸலா (சமாதான) மும், அருளும் உன் அடிமையும் திருத்தூதருமாகிய முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும், அவர்களுடைய அனைத்துத் தோழர்களுக்கும் உண்டாவதாக.

முஸ்லிம் பெண்கள் தொடர்பான விவகாரங்களில் இஸ்லாமிய சட்டம் அதிக முக்கியத்துவத்தை வழங்கி கவனம் கொள்கின்றது. அதில் அவர்களது கற்பு, கௌரவம், அந்தஸ்து போன்றவற்றைப் பாதுகாத்து, மிக்க மரியாதையான நிலையில் வைப்பது நோக்கமாகக் கொள்ளப்பட்டுள்ளது. பெண்களின் உடை, அவர்களது அழகையும் அலங்காரங்களையும் வெளிக்காட்டுதல் என்பன மீது கட்டுப்பாடு விதிக்கப் பட்டிருப்பது, அவர்களின் பாதுகாப்பிற்கேயாகும்; அவற்றின் மூலம் தீய செயல்கள் உருவாவதைத் தடுப்பதற்கேயாகும். உண்மையில், இஸ்லாம், பெண்களின் சுதந்திரத்தின் மீது கை வைக்கவில்லை; கட்டுப்பாடு விதிக்கவில்லை. மாறாக, அவர்கள் மானக்கேடான தாழ்ந்த நிலையைச் சென்றடைவதைத் தடுத்து நிறுத்தி, உரிய பாதுகாப்பை வழங்குவதன் மூலம் உயர்வான இடத்தை அடையச் செய்வதையே நோக்கமாகக் கொண்டுள்ளது.

இந்நூலில், ஹிஜாப் மூலம் பெண்களுக்கு வழங்கப்பட்டுள்ள பாதுகாப்பு அரணின் சிறப்பம்சங்கள் பற்றி தெளிவுகள் தரப்பட்டுள்ளன. இவை ஹிஜாப் அணிவதில் பற்றுள்ள பெண்கள், தம்மை இன்னும் ஒழுங்காக நெறிப்படுத்திக்கொள்ள ஆர்வம் ஊட்டுபவையாக அமையும். அதோடு, பெண்களின் அழகை வெளிக்கொணர்ந்து கவர்ச்சியாகக் காட்டும் அலங்காரங்களின் ஆபத்து பற்றியும் குறித்துக் காட்டப்பட்டுள்ளது; உணர்ந்து நடத்தல் அவசியம். மேலும், ஹிஜாபை விடுவதன் மூலம்

---

*1. ஸலாத்: 'அல்லாஹ்வின் சாந்தி அவன் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது கிட்டுமாக!' என்பதன் கருத்து, அல்லாஹ்வின் போற்றுதலும், விண்ணில் மிக உயர்வான இடத்தில் இருக்கும் மலக்குகளுக்கு அவர்கள் பற்றி பிரஸ்தாபித்தலுமாகும்.*

இவ்வுலகிலும் மறுமையிலும் ஏற்படும் பயங்கர விளைவுகளையிட்டு எச்சரித்துள்ளமை யாவரதும் கவனத்திற்குரியவை.

அல்லாஹ் எம் எண்ணங்களை அறிந்தவன்; அவன் எமக்குப் போதுமானவன்; அவனே மிகச் சிறந்த பாதுகாவலன்.

★ *கலாநிதி செய்க் முஹம்மத் பின் இஸ்மாயில்*

★ *கலாநிதி ஸாலிஹ் அஸ் ஸாலிஹ் (மொழிபெயர்த்து விரிவுரை வழங்கியவர்)*



# ஹிஜாபின் சிறப்பம்சங்கள்!

## 1 – கீழ்ப்படிவுமிக்க ஒரு செயல்!

ஹிஜாப் என்பது அல்லாஹ் (சு.வ.)[2] வுக்கும், அவன் தூதர் முஹம்மத் (ஸல்)[3] அவர்களுக்கும் அடிபணிந்து நடக்கும் ஒரு செயலாகும். அல்லாஹ் அதனைத் தனக்கும் தன் தூதருக்கும் அடிபணியும் ஒரு கடமையாக ஆக்கி வைத்துள்ளான்.

அவன் கூறுகின்றான்:

﴿ وما كانَ لمؤمنٍ ولا مؤمنةٍ إذا قضى الله ورسولُه أمراً أن يكونَ لهم الخِيَرَةُ من أمرهم ومن يعصِ الله ورسوله فقد ضل ضلالا مبينا ﴾ [الأحزاب، الآية ٣٦]

***"அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஏதேனும் ஒரு விவகாரத்தில் தீர்ப்பளித்துவிட்டால், பிறகு அந்த விவகாரத்தில் சுயமாகத் தீர்ப்ப ளிக்கும் அதிகாரம் இறை நம்பிக்கை கொண்டுள்ள எந்த ஆணுக்கும், இறை நம்பிக்கை கொண்டுள்ள எந்தப் பெண்ணுக்கும் கிடையாது. மேலும், எவன் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் மாறு செய்கின்றானோ, அவன் வெளிப்படையான வழிகேட்டில் வீழ்ந்து விட்டான்."***

*(அல் குர்ஆன் 33 : 36)*

அவன் மீண்டும் கூறுகின்றான்:

﴿ فلا وربك لا يؤمنونَ حتى يُحكِموكَ فيما شجرَ بينَهُم ثمَّ لا يجدوا في أنفسِهم حرَجاً مما قَضيْتَ ويُسلِّموا تسليما ﴾ [ النساء، الآية ٦٥ ]

---

*2. (சு.வ.) சுப்ஹானஹு வதஆலா: 'மிகுந்த மேன்மையும் கண்ணியமும் பொருந்தியவன்' என்பது இதன் கருத்து.*

*3. (ஸல்) ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம்: 'அல்லாஹ்வின் சாந்தியும் சமாதானமும் அவன் தூதர் முஹம்மத் அவர்கள் மீது உண்டாவதாக' என்பது இதன் கருத்து.*

*"(முஹம்மதே!) உம் இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தங்களுக்கிடையே ஏற்பட்ட பிணக்குகளில் உம்மை நீதிபதியாக ஏற்றுக் கொண்டு பின்னர் நீர் அளிக்கின்ற தீர்ப்பு குறித்து தம் உள்ளங்களில் எத்தகைய அதிருப்தியும் கொள்ளாமல், முற்றிலும் அதற்கு அடிபணியாத வரை அவர்கள் நம்பிக்கை கொண்டவர்கள் ஆகமாட்டார்கள்."*

*(அல் குர்ஆன் 4 : 65)*

பெண்கள் ஹிஜாப்[4] அணிய வேண்டும் என்பது வல்ல அல்லாஹ்வின் ஒரு கட்டளையாகும்.

அவனது கட்டளை அல் குர்ஆனில் இவ்வாறு இருக்கின்றது:

﴿ وقل للمُؤمناتِ يغضُضْنَ من أبصارِهِنَّ ويحفَظنَ فروجهُنَّ ولا يُبدينَ زينَتَهُنَّ إلاَّ ما ظَهَرَ منها وليَضرِبْنَ بِخُمرِهِنَّ على جُيُوبهِنَّ ﴾

*" மேலும், (நபியே!) இறை நம்பிக்கை கொண்ட பெண்களிடம் கூறும்: அவர்கள் தங்களுடைய பார்வைகளைப் பேணிக் கொள்ளட்டும். தங்களுடைய வெட்கத் தலங்களைப் பாதுகாக்கட்டும். தங்களுடைய அழகை வெளியில் காட்டாதிருக்கட்டும்; அதிலிருந்து தாமாக வெளியே தெரிகின்றவற்றைத் தவிர! மேலும், தங்களுடைய மார்புகள் மீது தங்கள் முந்தானையைப் போட்டுக் கொள்ளட்டும்."*

*(அல் குர்ஆன் 24 : 31)*

அல்லாஹ்வின் பார்வையில், யாரேனும் தமது அழகைக் கவர்ச்சியாக காட்டுவது அறியாமை சார்ந்த செயலாகும் எனக் கொள்ளப் படுகின்றது.

அவன் அறிவுரை வழங்குகின்றான்:

﴿ وقَرْنَ في بُيُوتِكُنَّ ولا تَبَرَّجنَ تَبرُّجَ الجاهِلِيَّةِ الأُولى ﴾

*"மேலும், உங்களுடைய வீடுகளில் தங்கியிருங்கள். முந்தைய*

---

*4. ஹிஜாப்: இது ஏதோவொரு கலாசார விடயம் எனக் கருதக் கூடாது. இது அல்லாஹ்வின் கட்டளை. இதற்கான நிபந்தனைகள் அரேபியர், எகிப்தியர், பாகிஸ்தானியர், கறுப்பு வெள்ளை நிறத்து அமெரிக்கர் என அமைவதில்லை. இதன் நோக்கம் பெண்களின் பாதுகாப்பே. இதற்கான நிபந்தனைகள், வழிமுறைகள் என்பன குர்ஆனிலும் ஸுன்னாவிலும் தெளிவு படுத்தப் பட்டுள்ளன. ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஆகுமானவை எவையென அவர்களைப் படைத்த அல்லாஹ்வைவிட அறிந்தவர்கள் யாருமிலர். அவனது நெறிமுறைகள் ஞானம் சார்ந்தவை; அவனது நடவடிக்கைகள் அனைத்தும் அவ்வாறே ஞானமிக்கவையாய் அமைகின்றவை.*

அஞ்ஞானக் காலத்தைப்[5] போன்று ஒப்பனைகளையும் ஒய்யாரங்களையும் காட்டிக் கொண்டு திரியாதீர்கள்.''

***(அல் குர்ஆன் 33 : 33)***

இறைவன் இன்னும் இயம்புகின்றான்:

﴿ وإذا سألتموهُنَّ متاعا فسئلوهُنَّ من وراءِ حِجابٌ ذٰلِكُم أطهر لِقُلُوبِكُم وقُلوبِهِنَّ ﴾

***''நபியின் மனைவியரிடம் நீங்கள் ஏதேனும் கேட்க வேண்டும் என்றால், திரைக்குப் பின்னால் இருந்து கேளுங்கள்.''***

***(அல் குர்ஆன் 33 : 53)***

மேற்காணும் வசனம் நபி (ஸல்) அவர்களின் மனைவியருக்கு மட்டும் வரையறுக்கப் பட்டதன்று. அது விசுவாசிகளான எல்லாப் பெண்களுக்கும் உரியது. கீழ்க்காணும் மறை வசனம் மேலும் தெளிவைத் தருவதாக அமைகின்றது - படியுங்கள்.

﴿ يا أيُّها النبيُّ قُل لأَزواجِكَ وبناتِكَ ونِساءِ المؤمنينَ يُدنينَ علَيْهِنَّ من جلابيبِهِنَّ ذٰلِكَ أدنى أن يُعْرَفنَ فلا يُؤْذَيْنَ ﴾

***''நபியே! உம்முடைய மனைவிகள், உம்முடைய புதல்விகள், மற்றும் நம்பிக்கையாளர் மனைவியர் ஆகியோரிடம் கூறும்: அவர்கள் தங்களுடைய துப்பட்டிகளின் முந்தானையைத் தங்கள் மீது தொங்க விட்டுக் கொள்ளட்டும். அவர்களை அறிந்து கொள்வதற்கும், அவர்கள் தொல்லைக்கு ஆளாகாமல் இருப்பதற்கும் இதுவே மிகவும் ஏற்ற முறையாகும்.''[6]***

***(அல் குர்ஆன் 33 : 59)***

---

*5. இஸ்லாத்திற்கு முந்தைய காலத்தையே இங்கு இறைவன் குறிப்பிடுகின்றான்.*

*6. எத்தகைய கட்டுப்பாடும் இல்லாத, 'திறந்த' சமூகங்களில் பெண்கள் அனுபவிக்கும் துன்பங்கள், தொந்தரவுகள் என்பன இரகசியமானவையல்ல; பலரும் அறிந்தவை; பகிரங்க விமர்சனங்களுக்கு இலக்காகி வருபவை. ''இவை ஏன் எப்படி நடக்கின்றன?'' என்பது நம் சிந்தனைக்குரியன. எம்மைப் படைத்ததன் சரியான நோக்கத்தைப் பற்றி தேரிய சிந்தனை செலுத்துவோர் உண்மையைப் புரிந்து கொள்வர். அல்லாஹ்வுக்கு அடிபணிந்து, வணங்கி வழிபட்டு வாழ்வதற்கென்றே நாம் படைக்கப் பட்டுள்ளோம். இந்நோக்கத்தை எவ்வாறு நிறைவேற்றுவது என்பதற்கான பூரண விளக்கம் மனிதர்க்கு அருளிய இறுதி வேதமாம் அல்குர்ஆனில் அழகுற விவரிக்கப் பட்டுள்ளது. அதன் மூலம் ஆண்களும் பெண்களும் தமது கௌரவம், மரியாதை, ஒழுக்கம் போன்றவற்றை பேணி வாழ்வது எப்படி என அறிய முடியும். ஹிஜாப் பெண்களுக்கு மிகுந்த கௌரவத்தையும் பாதுகாப்பையும் அளிக்கின்றது; அதோடு, தீயவர்களின் கரங்களிலிருந்தும், கண்களிலிருந்தும் தம்மைத் தற்காத்துக் கொள்ளும் வழிமுறையாகவும் அமைகின்றது.*

நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள்:

" المَرأةُ عَوْرَة "

***"பெண் மறைப்பிற்குரியவள் (பாதுகாக்கப்பட வேண்டியவள்)."*** [7] என்று.

## *2 - ஹிஜாப் என்பது இஃப்ஃபாஹ் (அடக்கம், நாணம்) சார்ந்தது!*

அல்லாஹ் (சு.வ.) ஹிஜாபை பெண்களின் கற்பு, அடக்கம், நாணம் போன்றவற்றை கொண்டுவரும் ஒரு வழிமுறையாக ஆக்கியுள்ளான். அதனை அச்சொட்டாகப் பின்பற்றுவதன் மூலம் அவர்கள் அவற்றைப் பெற முடியும். இல்லாவிட்டால் சங்கடங்கள் வருவது திண்ணம்.

அல்லாஹ் அறிவுறுத்துகின்றான்:

﴿ يا أَيُّها النبيُّ قُل لأَزواجِكَ وبَنَاتِكَ ونساءِ المؤمِنِينَ يُدنِينَ عَلَيْهِنَّ من جَلابِيبِهِنَّ ذلكَ أدنى أن يُعْرَفنَ فلا يُؤْذَيْنَ ﴾

***"நபியே! உம்முடைய மனைவிகள், உம்முடைய புதல்விகள், மற்றும் நம்பிக்கையாளரின் மனைவியர் ஆகியோரிடம் கூறும்: அவர்கள் தங்களுடைய துப்பட்டிகளின் முந்தானையைத் தங்கள் மீது தொங்கவிட்டுக் கொள்ளட்டும். அவர்களை அறிந்து கொள்வதற்கும், அவர்கள் தொல்லைக்கு ஆளாகாமல் இருப்பதற்கும் இதுவே மிகவும் ஏற்ற முறையாகும்."***

***(அல் குர்ஆன் 33 : 59)***

எனினும், அனைத்துக் கவர்ச்சிகளையும் இழந்துவிட்ட, வயதான பெண்கள் தமது மேலாடைகளைக் கழற்றி வைக்கவும், தமது முகம், கைகள் என்பன வெளியில் தெரியக்கூடிய வகையில் இருக்கவும், இறைமறை இணக்கம் தெரிவித்துள்ளது. அதேவேளை, நாணமும் வலியுறுத்தப் படுவது கவனத்திற் கொள்ளப்படல் வேண்டும்.

---

*7. அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கும் இந்த ஹதீஸை இமாம் திர்மிதி (ரஹ்) அவர்கள் தமது 'திர்மிதி' கிரந்தத்தில் பதிவு செய்துள்ளார்கள். இதுவொரு (ஹஸன் - கரீப்) நல்ல - பலயீனமான ஹதீஸ் எனவும் குறிப்பிட்டுள்ளார்கள். (ஹஸன் - கரீப் என்றால், அதனை அறிவித்தவர்களது முழு வரிசையிலும் அல்லது ஒரு பகுதியில் ஓர் அறிவிப்பாளர் மட்டும் காணப்படுவதாகும்.) அதேவேளை, இமாம் சுயூத்தி (ரஹ்) அவர்கள் இது ஆதாரபூர்வமான ஒரு ஹதீஸ் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.*

இதோ இறைமறை இயம்புகின்றது:

﴿ والقَواعِدُ منَ النِّسآءِ الّلاتِي لا يرجُونَ نِكاحاً فليسَ عَلَيْهِنَّ جُناحٌ أن يَضَعنَ ثِيابَهُنَّ غيرَ متَبرِّجاتٍ بِزينَةٍ وأن يَستَعفِفنَ خيرٌ لَّهُنَّ والله سميعٌ عليمٌ ﴾

***"எந்தப் பெண்கள் இளமைப் பருவத்தைக் கடந்து திருமணத்தில் விருப்பம் இல்லாதவர்களாய் இருந்து விடுகின்றார்களோ, அந்தப் பெண்கள் அழகை வெளிக்காட்டாதவர்களாய், தங்கள் மேலாடைகளைக் கழற்றி வைப்பதில் அவர்கள் மீது யாதொரு குற்றமுமில்லை; ஆயினும், அவர்களும் நாணமுள்ள பெண்களாய் நடந்து கொள்வதே அவர்களுக்கு மிக ஏற்றதாகும். மேலும், அல்லாஹ் யாவற்றையும் செவியேற்பவனாகவும், நன்கறிபவனாகவும் இருக்கின்றான்."***

*(அல் குர்ஆன் 24 : 60)*

உண்மையில், வயதான பெண்களாயினும் தமது நாணத்தைப்[8] பாதுகாத்து வாழ்வதே சிறப்பு, மேன்மை என்பது அல்லாஹ்வின் கூற்று. அவ்வாறாயின் இள நங்கைகளையிட்டு எத்தகைய முடிவுக்கு நாம் வரவேண்டும் என்பதை நன்கு சிந்தித்து, நடவடிக்கை எடுப்பது நன்று.

## *3 – ஹிஜாப் என்பது தஹாரா (பரிசுத்தம்) சார்ந்தது!*

அல்லாஹ் (சு.வ.) ஹிஜாபை நடைமுறைக்குக் கொண்டுவருவதில் தனது ஹிக்மாவை (ஞானத்தை) வெளிப்படுத்தியுள்ளான்.

அவன் கட்டளை இதுதான்:

﴿ وإذا سألتُموهُنَّ متاعا فسئلوهُنَّ من وراءِ حِجابٌ ذلِكُم أطهر لِقلُوبِكُم وقلُوبِهِنَّ ﴾

***"நபியின் மனைவியரிடம் நீங்கள் ஏதேனும் கேட்கவேண்டும் என்றால், திரைக்குப் பின்னால் இருந்து கேளுங்கள். உங்களுடையவும், அவர்களுடையவும் உள்ளங்களின் தூய்மைக்கு இதுவே ஏற்ற முறையாகும்."***

*(அல் குர்ஆன் 33 : 53)*

---

*8. இவ்வசனத்தில், "அல்லாஹ் யாவற்றையும் செவியேற்பவனாகவும், நன்கறிபவனாகவும் இருக்கின்றான்" என்பது குறித்துக் காட்டப்பட்டுள்ளது. 'ஆண்களுக்கும் பெண்களுக்கும் எவை ஆகுமானவை என்பது தொடர்பான அத்தனை அம்சங்களையும் அறிந்தவன் அல்லாஹ்' என்பதையிட்டு எவரும் அவனுக்கெதிராக சவால்விட முடியாது. ஹிஜாப் அணிய வேண்டும் என்பது அவனது கட்டளைகளுள் ஒன்று. அதன் நல்ல விளைவுகள் தொடர்பான அவனது அறிவு பரிபூரணமானது; ஞானம் சார்ந்தது.*

விசுவாசிகளான ஆண்களினதும் பெண்களினதும் உள்ளத்தைத் தூய்மைப் படுத்துவதில் ஹிஜாப் பெரும் பங்கு வகிக்கின்றது.

கண்கள் எதனையும் காணாதபோது உள்ளமும் அதில் விருப்பம் கொள்வது இல்லை. அதேவேளை, கண்கள் காணும் எதிலும் உள்ளம் விருப்பம் கொள்ளலாம்; அல்லது விருப்பம் கொள்ளாமலும் இருக்கலாம். எது எப்படியோ (ஹிஜாப் மூலம்) பார்வைக்குத் திரையிடுவதானது உள்ளத்தைத் தூய்மைப் படுத்தி, ஃபித்னா (தீய நடத்தை) விளைவதைத் தடுக்கத் துணை புரிகின்றது; அதோடு நோயுற்ற உள்ளங்களுக்கு வேலியாகவும் அமைகின்றது. காலக் கிரமத்தில் அவ்வுள்ளங்கள்கூட திருந்தி தூய்மையடைய இது வழி வகுக்கின்றது.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ فلا تخضعن بالقول فيطمع الذي في قلبه مرض وقلن قولا معروفا ﴾

***"மென்மையாகப் பேசாதீர்கள். ஏனெனில், உள்ளத்தில் கெட்ட எண்ணத்தைக் கொண்டிருக்கும் யாரேனும் ஒருவன் சபலம் கொள்ளக் கூடும்."***

*(அல் குர்ஆன் 33 : 32)*

# 4 - ஹிஜாப் என்பது ஒரு கேடயம்!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" إن الله حيي ستير يحب الستر "

***"மேன்மை பொருந்திய அல்லாஹ் 'ஹய்யீ'யும், [9] 'ஸித்தீர்'ம் [10] ஆவான். அவன் 'ஹயா' (என்னும் நாணத்தையும்) 'ஸித்தீர்' (என்னும்***

*9. ஹய்யீ - அல்லாஹ் நாணமிக்கவன்: அவன் தனது அடியார்களின் கீழ்ப்படிவற்ற செயல்களிலிருந்து அவர்களை விடுவிப்பது இல்லை. அல்லாஹ்வின் தேவை அவர்களுக்கு இருக்கும் நிலையில், அவர்கள் வெளிப்படையாகவே அவனுக்கு மாறு செய்கின்றனர். இருந்தும் அவன் (நாணமுடையவன் என்ற நிலையில்) அவர்களை இழிவுபடுத்துவதில் நாணமுற்று, அவர்கள் செய்த குற்றத்தை நினைத்து, வருந்தி பாவமன்னிப்புக் கேட்கும் கதவை திறந்து வைத்துள்ளான். எனினும், அவர்கள் பாவங்களைப் பரப்புவதிலும், கீழ்ப்படியாமையிலும் ஆர்வத்துடனும், பிடிவாதத்துடனும் இருந்தால், அவர்களைத் தண்டிக்க அல்லாஹ் போதுமானவன்.*

*10. ஸித்தீர் - அல்லாஹ் 'ஸித்தீர்' ஆனவன்: கீழ்ப்படியாமை மிக்க செயல்களைத்*

*பாதுகாப்பையும் மறைப்பையும்) விரும்புபவன்.''* [11]

அவர்கள் மீண்டும் நவின்றார்கள்:

" إيما إمرأةٌ نزعت ثيابها في غير بيتها ، خرَقَ ا لله عزَّ وجلَّ عنها سِترَها "

***''எந்தப் பெண்ணாவது தனது இல்லத்திலன்றி (வேறு இடத்தில் தகாத தேவைக்காகக் காட்சிதரும் நோக்குடன்) தன் ஆடைகளைக் களைவாளாயின் அவள் அல்லாஹ்வின் பாதுகாப்பை உடைத்துக் கொள்கின்றாள்.''*** [12]

இது, அந்த இடத்திலான செயலைப் பொறுத்து (நல்லதாயின்) வெகுமதியும் (கெட்டதாயின்) தண்டனையும் தரத்தக்கதாக அமைகின்றது.

## 5 – ஹிஜாப் என்பது தக்வா (இறையச்சம்/ இறையன்பு) சார்ந்தது!

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ يا بني آدمَ قد أنزلنا عليكُم لباساً يواري سوءاتِكُم وريشاً ولباسُ التّقوى ذلكَ خيرٌ ﴾

***''ஆதமுடைய மக்களே! மெய்யாகவே, நாம் உங்களுக்கு உங்களுடைய மானத்தை மறைக்கவும், உங்களுக்கு அலங்காரமாகவும், ஆடையை அளித்துள்ளோம். ஆயினும், தக்வா (பயபக்தி) எனும் ஆடையே (அதை விட) மேலானதாகும்.''***

*(அல் குர்ஆன் 7 : 26)*

---

*தடுக்கும் வழிமுறைகளை அல்லாஹ் வழங்கியுள்ளான். அல்லாஹ் எண்ணற்ற உதவிகளை வழங்கும்போது அடியார்கள் கீழ்ப்படிவற்ற செயல்களில் ஈடுபடுகின்றனர். நாம் ஒவ்வொருவரும் அவன்பால் திரும்பி பச்சாதாபப்பட்டு அவனது பாபமன்னிப்பைப் பெற்றுக்கொள்ளும் சந்தர்ப்பத்தைத் தந்துள்ளான். அல்லாஹ், பாவங்கள் பரவுவதை விரும்பாதவனை நேசிக்கின்றான்; அதோடு தனது பாவங்களை வெளிப்படுத்துபவனும்,கீழ்ப்படியாதுநடப்பவனுமானமுஸ்லிமைவெறுக்கின்றான். எந்த முஸ்லிம் தனது சகோதர முஸ்லிமின் பாவங்களை வெளிப்படுத்தாது இருப்பதுடன், அல்லாஹ்விடம்பாபமன்னிப்பைவேண்டிநிற்கும்படிஅந்தப்பாவம் செய்பவனிடம் கூறுகின்றானோ அவனை அல்லாஹ் நேசிக்கின்றான். ஹிஜாப் அல்லாஹ்வின் விருப்புக்குரியது. ஏனெனில், அது அந்நியவர்க்கு அழகினை விருந்தாக்கி பாவச் செயல்கள் பரவுவதைத் தடுக்கும் ஒரு கேடயம் என்பதனாலாகும்.*

*11. இது - அபூதாவுத் நிஷாஈ, அல் பைஹக்கீ, அஹ்மத், ஸஹீஹ் அந்நிஷாஈ என்பனவற்றில் அறிவிக்கப் பட்டுள்ளது.*

*12. இது - அபூதாவுத், அத் திர்மிதீ ஆகியவற்றில் அறிவிக்கப் பட்டுள்ளது. ''இது நல்லதொரு ஹதீஸ்'' என இமாம் திர்மிதீ கூறுகிறார்.*

இன்று, உலகில் பரவலாகவுள்ள ஆடை அணியும் முறை உடலழகை வெளிக்காட்டும் அலங்காரமாகவே உள்ளது. குறிப்பாக, பெண்களின் ஆடைகள் மிகக் கஷ்டப்பட்டு அவர்களின் உடலை மறைப்பனவாகவே உள்ளன. அதாவது, அவை அரை நிர்வாண ஆடைகளாக உள்ளன.

எனினும் விசுவாசிகளான பெண்களைப் பொறுத்த மட்டில் அவர்களது ஆடைகள் மேற்காணும் நிலைக்கு மாறானதே. அவர்கள் தமது எஜமானனின் கட்டளைக்கமைய தம்முடலைப் பாதுக்காத்துக் கொள்ளவும், தமது உடலின் அந்தரங்கப் பகுதிகளை மறைத்துக் கொள்ளவுமே ஆடைகள் அணிவர். அந்த வகையில் அதுவோர் இறையச்சம் சார்ந்த செயலாக அமைகின்றது.

## 6 – ஹிஜாப் என்பது ஈமான் (விசுவாசம்) சார்ந்தது!

அல்லாஹ், 'அல் முஃமினாத்' எனும் விசுவாசிகளான பெண்களுக்கன்றி (மற்றவர்க்கு) ஹிஜாப் பற்றி பிரஸ்தாபிக்கவில்லை.

அவன் இவ்வாறு தன் தூதரைப் பணிக்கின்றான்:

﴿ وقل للمؤمنات ﴾

***"மேலும், (நபியே!) இறை விசுவாசம் கொண்ட (முஃமினான) பெண்களிடம் கூறும்..."***

*(அல் குர்ஆன் 24 : 31)*

மற்றொரு மறை வசனத்தில் முஃமினான பெண்களை

﴿ ونساء المؤمنين ﴾

"விசுவாசிகளின் மனைவியர்.." என்று விளித்துப் பேசும்படி தனது நபியைப் பணிக்கின்றான்.

பனூதமீம் கோத்திரத்தைச் சேர்ந்த பெண்கள் ஒருமுறை ஆயிஷா (ரலி)[13] அவர்களை சந்திக்க வந்தார்கள். அவ்வமயம் அவர்கள் மெல்லிய ஆடை அணிந்திருந்தார்கள். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்:

***"உண்மையிலேயே நீங்கள் விசுவாசம் கொண்ட (முஸ்லிம்) பெண்களாயின் (நீங்கள் அணிந்துள்ள) இவ்வாடைகள் விசுவாசம் கொண்டவர்களுக்குரிய ஆடைகள் அல்ல (என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.) நீங்கள் விசுவாசம் கொள்ளாத (முஸ்லிமல்லாத) பெண்களாயின் இதனை அனுபவியுங்கள். (அதாவது இந்த ஆடைகளை அணிந்து கொள்ளுங்கள்.)"***[14]

---

13. (ரலி): ரலியல்லாஹு அன்ஹா - அல்லாஹ் அவரைப் பொருந்திக் கொள்வானாக.
14. அபூ சுலைமான் அல் கிதாபி, சுனன் அந்நிஷாஈக்கான விளக்கத்தில் இதனை அறிவித்துள்ளதாக 'மஆலிம் அஸ்ஸுனனில்' அறிவிக்கப் பட்டுள்ளது. Vol:4: 376

# 7 – ஹிஜாப் என்பது 'ஹயா' (நாணம்) சார்ந்தது!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" إنَّ لكل دين خُلُقاً ، وخُلُق الإسلام الحياء "

*''ஒவ்வொரு மதத்திற்கும் உரிய ஓர் ஒழுக்க மாண்பு உண்டு. இஸ்லாத்தின் ஒழுக்க மாண்பானது 'ஹயா' (நாணம்) சார்ந்ததாகும்.''*[15]

மற்றொரு முறை அவர்கள் நவின்றார்கள்:

" الحياء من الإيمان ،والإيمان في الجنّة "

*''நாணம் விசுவாசம் சார்ந்தது; விசுவாசமோ சுவனத்திற்குரியது.''*[16]

இன்னும் சொன்னார்கள்:

" الحياء والإيمان قُرنا جميعاً ، فإذا رُفِعَ أحَدُهُما رُفِع الآخر"

*''நாணமும் விசுவாசமும் ஒன்றையொன்று சார்ந்து நிற்பவை; இவற்றுள் ஒன்றை எடுத்துவிட்டால் மற்றது வீழ்ந்துவிடும்.''*[17]

விசுவாசிகளின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:

*''அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் பின்னர் எனது தந்தையும் அடக்கம் செய்யப்பட்ட அறையினுள் நான் எனது மேலாடை இல்லாது பிரவேசிப்பது வழக்கமாக இருந்தது. அப்பொழுது அவர்கள் இருவரும் எனது கணவரும் தந்தையுமே என்ற கருத்து இருந்தது.*

---

15. இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் 'முஅத்தா' எனும் (2:905)அரபு நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் வரிசை 'முர்ஸல்' ஆனது. அறிவிப்பாளரின் தொடர் ஓர் இடத்திலோ அல்லது மற்றோர் இடத்திலோ அறுபட்டுள்ளது. உதாரணமாக: A என்பவருக்கு B என்பவருக் அல்லது C என்பவருக் நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்..,''....''. C என்பவர் நபிகளாரிடமிருந்து ஹதீஸை நேரடியாக கேட்காத பட்சத்தில் அது 'முர்ஸல்' ஆன ஹதீஸாகும். மேற்காணும் ஹதீஸ் தொடர்பாக இப்னு ஹிப்பான் அவர்கள், 'இதன் அறிவிப்பாளர் வரிசை இரண்டு வழிகளிலும் பலயீனமானதே' எனக் கூறியுள்ளார்.

16. இதனை அறிவிக்கும் அல் திர்மிதி (ரஹ்) அவர்கள், ''இது ஆதாரபூர்வமான நல்லதொரு ஹதீஸ்'' எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

17. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கும் இந்த ஹதீஸை அல் ஹாக்கிம் தனது 'முஸ்தத்ரக்' (1/22 அரபு மொழி) நூலில் பதிவு செய்துள்ளார்கள். ''இது ஆதாரபூர்வமான நல்லதொரு ஹதீஸ்'' என அவர் குறிப்பிடுகின்றார். அல் ஹாக்கிம் அவர்களின் இக்கூற்றை அல் தஹபி அவர்கள் உறுதி படுத்தியுள்ளார்கள்.

*எனினும், உமர் (ரலி) அவர்கள் அங்கு அடக்கப்பட்ட பின்னர், அவரைக் கொண்டு ஏற்பட்ட நாணத்தின் காரணமாக நான் மேலாடை இல்லாது அந்த அறையினுள் பிரவேசிப்பதில்லை.''*[18]

இங்கு அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அந்நிய ஆண்கள் தொடர்பாக எத்தகைய கருத்தைக் கொண்டிருந்தார்கள் என உணர முடிகின்றதல்லவா! ஒரு பெண்ணிடம் இயற்கையிலேயே அமையப் பெற்றுள்ள நாண உணர்வுக்கு ஏற்ற விதத்திலேயே ஹிஜாபும் அமைந்துள்ளது.

## *8 - ஹிஜாப் என்பது கீராஹ் (மனக் கிளர்ச்சி) சார்ந்தது!*

நேர்வழியிலான ஒரு மனிதனின் இயற்கையான தன்மையானது, அவரது மனைவியையோ பெண் மக்களையோ அந்நியர் பார்ப்பதை விரும்புவதில்லை. ஹிஜாப் இத்தன்மைக்கு மிகப் பொருத்தமான ஒன்றாகவே அமைந்துள்ளது. *கீராஹ்* எனும் மனக் கிளர்ச்சியானது, மனிதனுக்கு ஒழுக்க உணர்வையூட்டி, தூண்டுதல் வழங்கி, பெண்களை அந்நியரிடமிருந்து பாதுகாக்க துணை புரிகின்றது.

இவ்வொழுக்க நிலை சார்ந்து நிற்பதை உலகின் பலர் இழந்து விட்டனர். அத்தகையோர் அந்நியப் பெண்களை இச்சை, ஆர்வம், ஆசையுடன் பார்ப்பதை நீங்கள் காணுவீர்கள். அதேவேளை தமது பெண்களை அவ்வாறு அந்நியர் பார்ப்பதைப் பற்றி அலட்டிக் கொள்வதுமில்லை. பலர் அரை நிர்வாணப் பெண்களுடன் அமர்ந்து அந்தக் காட்சியை ரசிப்பதைக்கூட நீங்கள் அவதானித்திருப்பீர்கள். அத்துடன், அவர்களது மனைவியர் அத்தகைய சூழலில் அவ்வாறு அலங்கரித்து கவர்ச்சிப் பாவைகளாகக் காட்சி தரும்போது, வெளியில் தெரியும் மறைவான பகுதிகளை மற்றவர்கள் பார்ப்பது பற்றி கவலை கொள்வதில்லை. அப்பகுதிகளை உற்று நோக்கு வதன் மூலம் தமது கண்களால் சுவைப்பது ஒரு பிரச்சினையாகத் தோன்று வதும் இல்லை. அவர்களது உள்ளுணர்வு என்னவெனில் 'நான் பார்க்க முடியும் என்றால், அவர்களும் பார்த்துவிட்டுப் போகட்டுமே!' என்பதாகும். அவர்களைப் பொறுத்த வரையில் இது ஒரு சுதந்திரமான தெரிவாகும்.

இத்தகையவருள் வெகு சிலர்தான், 'தமது மனைவியர்க்கு வேறு ஆண்களுடன் தொடர்புண்டு!' எனத் தெரியவந்தால் ஏதேனும் உணர்வைப்

---

*18. 'அஸ்ஸிம்த் அத்தமீம் ஃபீ மனிகிப் உம்முஹாதுல் முஃமினீன்' எனும் நூலின் பக்: 91; விசுவாசிகளின் அன்னையரது (நபிகளாரது மனைவியரது) உயர் பண்புகளை தொகுத்துத் தரும் இந்நூலை இப்னு அஸ்ஸாக்கிர் என்பவர் தொகுத்துள்ளார். அல் ஹக்கீம் இத்தகைய மற்றொரு அறிவிப்பில், ''இமாம்களான புகாரி, முஸ்லிம் ஆகியோரது கருத்துக்களுக்கமைய இதனை 'நல்லது' '' எனக் கூறுகிறார். அதோடு, ''இந்த இரு இமாம்களும் இவ்வறிவிப்பு தொடர்பாக எதுவும் கூறவில்லை'' எனவும் கூறுகின்றார். அல் ஹக்கீமின் இக்கூற்று தொடர்பாக அத்தஹபி எதுவும் கூறவில்லை.*

பெறுபவர்கள். அப்பொழுது, அதன் தாக்கத்தால் அவர்கள் கல்லாய் சமைந்து விடுகின்றனர்; 'கௌரவம், மானம், மரியாதை எல்லாமே போய் விட்டது!' என்ற வேதனை மிகுந்த உணர்வுக்கு ஆளாகின்றனர்.

சில சமூகங்களில் இப்பிரச்சினை தொடர்பாக தீர்வு காண போலீஸ்காரரை அழைக்கும் வழக்கம் உள்ளது. வேறு எது பற்றியும் கவனத்தில் கொள்ளாது, 'கீராஹ்' எனும் ஒழுக்கம் சார்ந்த மன உணர்வு இல்லாத ஒரேயொரு தன்மையை வைத்து, அத்தகையவரை, 'சாக்கடையில் உழலும் பன்றியைப் போன்றோர்' என அழைக்க முடியாதா எனக் கேட்கத் தோன்றுகிறது.

தற்கால உலகின் பல சமூகங்களிடையே மிருக உணர்வு சார்ந்த பண்புகள் வேகமாக வளர்ந்து வருவதைத் தெளிவாகக் காணக் கூடியதாய் உள்ளது.

அலி (ரலி) அவர்கள் சில பெண்களிடம் இவ்வாறு கூறினார்கள்:

***"வியாபாரச் சந்தையில் இருக்கும் முஸ்லிம்களல்லாத குஃப்ஃபார் (விசுவாசிகளல்லாத ஆண்)களை, பெண்களான நீங்கள் சூழ்ந்து குவிவதாக எனக்கு அறிவிக்கப் பட்டுள்ளது. உங்களுக்கு 'கீராஹ்' (ஒழுக்கம் சார்ந்த மனக் கிளர்ச்சி) இல்லையா? எவரிடம் 'கீராஹ்' இல்லையோ அவரிடம் நல்லது என எதுவும் இல்லை. இஸ்லாம் 'கீராஹ்' என்பதனை விசுவாசத்தின் உள்ளடங்கிய பாகமாகக் கருதுகின்றது."***

இஸ்லாமிய கண்ணோட்டத்தில் - மனைவி, மகள், அல்லது மற்ற எந்த முஸ்லிம் பெண்களாயினும், அவர்களது கண்ணியத்தை மதித்து, காப்பதற்கு ஆவன செய்வது அவசியம். இதற்கு ஏற்ற நெறிமுறைகளை மிகச் சிறப்பாக வழங்கி நிற்கும் வாழ்க்கைத் திட்டமே இஸ்லாம்.



# தபர்ருஜ் (பெண்களின் கவர்ச்சியைக் காட்டுவது) ஓர் அவமானம்!

## 1 - தபர்ருஜ்[19] என்பது அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் அடிபணியாதிருப்பதாகும்!

எவர் அல்லாஹ்வுக்கும் அவன் தூதர் (ஸல்) அவர்களுக்கும் கீழ்ப்படியாது இருக்கின்றாரோ அவர் தனக்குத் தானே தீங்கைத் தேடிக் கொள்பவர் ஆவார். அன்றி, அவரது அந்தத் தீய, கீழ்ப்படியாத தன்மையால் அல்லாஹ்வுக்கு எந்தத் தீங்கும் ஏற்படப் போவது இல்லை.

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" كل أمتي يدخلون الجنة إلا من أبى" فقالوا يا رسول الله من يأبى ؟ قال :

" من أطاعني دخل الجنة ، ومن عصاني فقد أبى "

---

*19. தபர்ருஜ்: மொழிவாரியான இதன் கருத்தானது 'ஒரு பெண்ணின் அழகை வெளிக் காட்டுவது, அவளது முகத்தை வெளிக்காட்டுவது, அவளது உடலமைப்பை வெளிக் காட்டுவது, அதோடு தன் கணவரல்லாத மற்ற ஆண்களைக் கவருவதற்காக எல்லா வகையான வழிகளையும் கையாள்வது' எனப்படும். இஸ்லாமிய மரபுப்படி இதன் கருத்து, 'பெண் தன் அழகை வெளிக் காட்டுவது' எனப்படும். மேலும், "அவள் எடுப்பான தோற்றம் தரும் வகையில் நடப்பதும் அங்க அசைவைத் தருவதுமாகும்." எனவும் கருத்து வழங்கப்படுகின்றது. (அல் தபாரி 22/4) சிலரின் கருத்து: "அந்நியர் கண்களுக்கு 'அழகாகத் தெரிவதற்கு' என ஒரு பெண் தன்னை என்னென்ன வகையில் அலங்கரித்துக் கொள்கின்றாளோ அவை எல்லாமே 'தபர்ருஜ்' ஆகும்." என்பதாகும். "சிலவேளை ஒரு பெண் மற்றவர்களின் கவனத்தை ஈர்க்கும் எண்ணத்துடன் தலையை மூடும் துணியை பளிச்சிடும் பல வண்ண நிறத்தில் கவர்ச்சிகரமாக அணிந்தால் அதுவும் ஜாஹிலிய்யா (அறியாமை கால) 'தபர்ருஜ்' எனும் கவர்ச்சி காட்டுதலாகும்." (ஆதாரம்: மௌலானா மௌதூதி (ரஹ்) அவர்கள் எழுதிய 'தஹிஜாப்' எனும் நூல்/ பக் : 132)*

*"எனது உம்ம(சமூக)த்தைச் சார்ந்த அனைவரும் சுவனம் புகுவர், மறுத்தவர்களைத் தவிர!" "யா ரஸூலுல்லாஹ்! யார் மறுப்பவர்கள்?" என அவர்கள் (நபித் தோழர்கள்) கேட்டனர். இதற்கு பதிலளித்த நபி (ஸல்) அவர்கள், "யார் எனக்குக் கீழ்ப்படிகின்றார்களோ அவர் சுவனம் புகுவார்; யார் எனக்கு மாறு செய்கின்றாரோ அவர்தான் (அதனுட் புகுந்திட) மறுப்பவர்கள்."*[20]

முஆவியா (ரலி) அவர்கள் சிரியாவின் ஹமாஸ் எனும் இடத்தில் ஓர் உரை நிகழ்த்திய போது, நபி (ஸல்) அவர்கள் ஏழு விடயங்களைத் தடை செய்ததாகவும், அவற்றுள் ஒன்றாக அவர்கள் தபர்ருஜை குறித்துக் காட்டியதாகவும் கூறியதாக அறிவிக்கப்படுகின்றது.[21]

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களது ஓர் அறிவிப்பில்,

*"நபி (ஸல்) அவர்கள் பத்து விதமான பண்புகளை விரும்பவில்லை; அவற்றுள் பொருத்தமற்ற இடத்தில் தன் அழகை வெளிக்காட்டும் தபர்ருஜூம் அடங்குகின்றது"*

எனக் குறிப்பிட்டுள்ளார்.[22]

இமாம் சுயூத்தி (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

*"தன்னை அழகுபடுத்தி அடுத்தவர்க்குக் காட்டுவது 'தபர்ருஜ்' சார்ந்த செயலே. அது வெறுக்கத் தக்கது. இதுதான் 'பொருத்தமற்ற இடம்' என்று மேலே குறிப்பிடப் படுவதற்கான விளக்கமாகும். ஆனால், தன் கணவருக்காக அழகுபடுத்திக் காட்டுவது குற்றமாகாது."*

## *2 – தபர்ருஜ் பயங்கர அழிவைத் தரும் பாவமாகும்!*

ருகய்யாவின் மகள் உமய்மாஹ் இஸ்லாத்தின் தூதை ஏற்கவும், நபி (ஸல்) அவர்களை 'அல்லாஹ்வின் தூதர்' என உறுதி கொள்ளவும் என நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் அவரிடம் நவின்றதாவது:

*"நான் உமக்கு அறிவுறுத்துவதாவது: நீர் அல்லாஹ்வுக்கான வழிபாட்டில் அவனுக்கு எத்தகைய இணை துணையும் கற்பிக்கக்*

---

*20. ஸஹீஹுல் புகாரி, அரபு - ஆங்கில நூல் வரிசை,* Vol. *9, ஹதீஸ்384 , பக்: 284.*

*21. இமாம் அஹ்மத் அவர்கள் அறிவிக்கும் இக்குறிப்பு அவர்களது 'முஸ்னத்' (4/101 அரபு மொழி) தில் பதிவாகி உள்ளது.*

*22. அந்நிஷாஈ அறிவிக்கும் இந்த ஹதீஸ் அவரது 'சுனன்' அரபுமொழி (8/141) நூலில் பதிவாகியுள்ளது.*

***கூடாது; நீர் திருடக் கூடாது; நீர் தகாத உடலுறவிலோ, விபச்சாரத்திலோ ஈடுபடக் கூடாது; நீர் உமது குழந்தையைக் கொல்லக் கூடாது; நீர் உமது கைகளுக்கிடையிலோ கால்களுக்கிடையிலோ அவதூறுகள் இட்டுக்கட்டக் கூடாது; நீர் அழுது புலம்புதல் கூடாது; நீர் ஜாஹிலிய்யா (இஸ்லாதிற்கு முந்திய அறியாமைக் கால)த்தில் போல 'தபர்ருஜ்' (எனும் அழகையோ கவர்ச்சியையோ காட்டக்) கூடாது.''[23]***

இங்கு, நபி (ஸல்) அவர்கள் அழிவைத் தரும் பாரிய பாவங்களுடன் தபர்ருஜையும் சேர்த்துள்ளார்கள் என்பது மிகத் தெளிவானதே.

## 3 - தபர்ருஜ் அல்லாஹ்வின் சாபத்தையும் அவனது கருணையிலிருந்து தூர விலகிச் செல்வதையும் கொண்டுவரும்!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" سيكون في آخر أمتي نساءٌ كاسياتٌ عارياتٌ ، على رؤوسهن كأسنمة البُخُت ، العنوهنَّ فإنَّهُنَّ ملعونات "

***''எனது சமூகத்தில், பிந்திய காலகட்டமொன்றில், பெண்கள் ஆடை அணிந்தும் (உண்மையில்) நிர்வாணமாக இருப்பர்; அவர்களது தலைகளின் மேல் ஒட்டகங்களின் திமில் போன்றவை (தலைமுடி வைக்கப்பட்டு) இருக்கும். அவர்களை சபியுங்கள். நிச்சயமாக அவர்கள் சபிக்கப்பட வேண்டியவர்களே.''[24]***

---

*23. இமாம் அஹ்மத் தனது 'முஸ்னத்' (2/196)தில் இதனைப் பதிவுசெய்துள்ளார். அஹ்மத் ஷாகிர் (ரஹ்) அவர்கள், "இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் வரிசை சிறப்பாகவுள்ளது" எனக் கூறுகிறார். அவர் மேலும் கூறுவதாவது: "இப்னு கதீர் (ரஹ்) அவர்கள் தமது தஃப்ஸீரில் (8:327, 328) இந்த ஹதீஸைக் குறிப்பிட்டு, "இதன் அறிவிப்பாளர் வரிசை சிறப்பாகவுள்ளது" என்றும் கூறுகிறார். அத்துடன் இந்த ஹதீஸை அத்திர்மிதீ, அந்நிஷாஈ, இப்னு மாஜாஹ் ஆகியவற்றுடன் தொடர்பு படுத்துகிறார்.*

** இந்த ஹதீஸுக்கு ஆதாரமாகக் கீழ்க்காணும் குர்ஆன் வசனம் அமைகின்றது:*

*"நபியே! விசுவாசிகளான பெண்கள் உம்மிடம் விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக வந்து, அவர்கள் அல்லாஹ்வுடன் எதனையும் இணைவைக்க மாட்டார்கள் என்றும், திருடமாட்டார்கள் என்றும், விபச்சாரம் செய்யமாட்டார்கள் என்றும், தம்முடைய குழந்தைகளைக் கொல்லமாட்டார்கள் என்றும், தங்களுடைய கை கால்களுக்கிடையே எந்த அவதூறையும் இட்டுக்கட்டமாட்டார்கள் என்றும், எந்த ஒரு நல்ல காரியத்திலும் உமக்கு மாறு செய்யமாட்டார்கள் என்றும் வாக்குறுதி அளித்தால், அப்போது அவர்களிடமிருந்து விசுவாசப் பிரமாணத்தை ஏற்றுக்கொள்ளும் . . ." (அல் குர்ஆன் 60:12)*

*குறிப்பிட்ட இந்த ஹதீஸிலும், குர்ஆன் வசனத்திலும் "கை கால்களுக்கிடையே அவதூறுகள் இட்டுக்கட்டக் கூடாது" என வருவது குறித்து 'தஃப்ஹீமுல் குர்ஆன்' எனும் தஃப்ஸீர் தரும் விளக்கம் வருமாறு.*

*"இதன் கருத்து இருவகை அவதூறுகளாகும். ஒன்று: ஒரு பெண் மற்ற பெண்களின் மீது*

## 4 - தபர்ருஜ் நரகத்தவர்களது பண்பு சார்ந்ததாகும்!

**நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:**

( صنفان من أهل النار لم أرَهُما : قومٌ معَهُم سياطٌ كأذناب البقر يضربون بها الناس ، ونساءٌ كاسيات عاريات ، مميلاتٌ مائلاتٌ ، رؤوسَهُن كأسنمةِ البُخُت المائلة ، لا يُدخلن الجنّةَ ، ولا يجدن ريحها ، وإن ريحها ليوجد من مسيرة كذا وكذا )

***"நரகத்து மக்களுள் நான் ஒருபோதும் காணாத இரண்டு வகையானவர்கள் இருக்கின்றனர். (அவர்களுள்) ஒரு சாரார், மாட்டின் வாலைப் போன்ற கசைகளைக் கொண்டிருப்பர். அவற்றைக்கொண்டு மக்களை அவர்கள் அடிப்பர். மறுசாரார், உடை அணிந்த நிலையிலும் நிர்வாணமாக இருக்கும் பெண்களாவர். அவர்கள் தீய வழியில் (தவறான பாதையில்) செல்வதுடன், அவர்களது தலையில் உயர்ந்து காணப்படும் திமிழ் போன்று (அலங்கரிக்கப்பட்ட) முடியைக்கொண்டு மற்றவர்களையும் தீய வழியில் செலுத்துவர். இப்பெண்கள் சுவனத்துள் பிரவேசிக்க மாட்டார்கள்; (அம்மட்டல்ல.) சுவனத்தின் நறுமணத்தை நுகரக்கூடிய அளவு அருகில் இருந்த போதிலும், அதனை அவர்கள் நுகரும் வாய்ப்பை பெறமாட்டார்கள்."[25]***

**அவதூறுகள் இட்டுக்கட்டக் கூடாது" என வருவது குறித்து 'தஃப்ஹீமுல் குர்ஆன்' எனும் தஃப்ஸீர் தரும் விளக்கம் வருமாறு:**

"இதன் கருத்து இருவகை அவதூறுகளாகும். ஒன்று: ஒரு பெண் மற்ற பெண்களின் மீது அவர்கள் அந்நிய ஆடவர்களுடன் நட்புக் கொண்டிருப்பதாக அவதூறு சுமத்துவது; அத்தகைய கதைகளை மக்களிடையே பரப்புவது. இரண்டு: ஒரு பெண் வேறெவனுக்கோ குழந்தையைப் பெற்றெடுத்துவிட்டு, பின்னர் இது உன்னுடைய குழந்தைதான் என்று கணவனை நம்ப வைப்பது." (திருக்குர்ஆன் 2 ஆம் பாகம், முதல் பதிப்பு 1992 ஒக்டோபர் - மௌலானா மௌதூதி (ரஹ்) அவர்கள்)

---

*அவர்கள் அந்நிய ஆடவர்களுடன் நட்புக் கொண்டிருப்பதாக அவதூறு சுமத்துவது; அத்தகைய கதைகளை மக்களிடையே பரப்புவது. இரண்டு: ஒரு பெண் வேறெவனுக்கோ குழந்தையைப் பெற்றெடுத்துவிட்டு, பின்னர் இது உன்னுடைய குழந்தைதான் என்று கணவனை நம்ப வைப்பது." (திருக்குர்ஆன் 2ஆம் பாகம், முதல் பதிப்பு 1992 Oct. - மௌலானா மௌதூதி (ரஹ்) அவர்கள்)*

*24. 'அல் முஜாம் அஸ்ஸகீர்' நூலில் (பக்:232) காணும் இந்த ஹதீஸை அத்தபரானி அறிவிக்கின்றார். அல் அல்பானி தனது 'ஹிஜாப்' (பக்.56) எனும் நூலில் இந்த ஹதீஸ் ஸஹீஹானது எனக் கூறுகின்றார். இப்னு அப்துல் பர் சார்பில் அஸ்ஸுயூத்தி அறிவிப்பதாவது : "மெல்லிய ஆடை அணியும் பெண்கள் தமது உடலின் வனப்பை, வடிவை வெளிக்காட்டுபவர்களே என இறை தூதர் (ஸல்) அவர்கள் இயம்பியுள்ளார்கள். உண்மையில் அவர்கள் ஆடை அணிந்தும் நிர்வாணமாகக் காட்சி தருபவர்களே ஆவார்கள்."*

*25. ஸஹீஹ் முஸ்லிம் (தாருல் அரேபியாவில் பிரசுரிக்கப்பட்ட ஆங்கில மொழிபெயர்ப்பு) Vol : 4 ஹதீஸ் எண் 6840.*

## 5 - தபர்ருஜ் மறுமை நாளில் இருளைத் தரும்!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" مَثَلُ الرافلة في الزينة في غير أهلها ، كمثل ظلمة يوم القيامة ، لا نور لها "

***"உலகில் தனது கணவனுக்கல்லாது (மற்றவர்களுக்காக) தன்னை அழகுபடுத்தித் திரியும் பெண்ணின் நிலை மறுமையின் இருளைப் போன்றதாகும். அங்கு எதுவித ஒளியும் இருக்கமாட்டாது."*** [26]

## 6 - தபர்ருஜ் நிஃபாக் எனும் நயவஞ்சகமாகும்!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" خير نسائكم الودود ، الولود ، المواتية ، المواسية ،إذا اتقين الله ،وشـرُّ نسـائكم المتبرجات المُتَخَيِّلات ، وهنَّ المنافقات ، لا يدخل الجنة مِنهُنّ إلاّ مثل الغراب الأعصم "

***"உங்கள் பெண்களுள் சிறப்பானவர்கள் மிகுந்த அன்பும், (பிள்ளை பாக்கியம் சார்ந்த) வளமும், (உதவி ஒத்தாசைப் புரியும்) இணக்கமும், அல்லாஹ்வுக்கு அச்சமுற்ற நிலையிலான ஆலோசனையும் கொண்டவர்களே ஆவார்கள். உங்கள் பெண்களுள் மிகக் கெட்டவர்கள் முதபர்ரிஜாத் உள்ள (தன் அழகை வெளிக்காட்டுப)வர்களும் முதஹய்யலாத் உள்ள (கர்வமான நிமிர்ந்த நடையும் அகம்பாவமும்***

---

*26. இமாம் திர்மிதி தனது சுனனில் (1167) இதை அறிவிக்கின்றார். அல்பானி இதை ஒரு பலயீனமான ஹதீஸ் எனக் குறிப்பிடுகின்றார். அவரது 'அழ்ழயீஃபா' (பலயீனமான ஹதீஸ்கள்) என்ற நூலைப் (1800) பார்க்கவும். அபூபக்கர் பின் அரபி (ரஹ்) கூறுகிறார்: இந்த ஹதீஸை அறிவிக்கும் இமாம் திர்மிதி "இது ஒரு பலயீனமான ஹதீஸ்" எனக் குறிப்பிடுகின்றார். "எனினும் இதன் கருத்து சரியானதே. ஏனெனில் கீழ்ப்படியாமையை சுவைப்பது உண்மையில் சித்ரவதையும் துன்பமுமாகும்..." எனவும் அவர் குறிப்பிடுகின்றார். இதன் கருத்து என்னவெனில் இத்தகைய பெண்கள் மறுமை நாளில் இருளில் கறுத்தவராக இருளால் தோற்றம் பெற்ற உடலைக் கொண்டவர்கள் போல் வருவார்கள். மாறாக, அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து செயல்படுவதால் வரும் கஷ்ட துன்பங்கள் திருப்தியையும் உயர்வையுமே தரும். காரணம், அவர்கள் அல்லாஹ்வினதும் நபிமார்களினதும் வெகுமதிகளை எதிர்பார்த்து இருப்பதாகும். உதாரணமாக: இவ்வுலகைப் பொறுத்தமட்டில் நோன்பு நோற்கும் ஒரு முஸ்லிமின் வாயிலிருந்து வரும் மணம் நல்லதாக இல்லாதிருக்கலாம். எனினும், அல்லாஹ்விடத்தில் அது கஸ்தூரி மணத்தை விடவும் மேலானதே. காரணம், அந்த முஸ்லிம் அல்லாஹ்வுக்குக் கீழ்படிந்து அவன் கட்டளையை நிறைவேற்றுகின்றார் என்பதாகும். அதேபோல், ஒரு பெண் அல்லாஹ்வுக்காக ஹிஜாப் அணிந்தால், அவளை 'பிற்போக்கானவள்', 'நாகரிகம் தெரியாதவள்', 'நடமாடும் கூடாரம்' என சிலர் தூற்றலாம். ஆனால், மறுமையில் அவளே வெற்றி பெறுபவள். அவளை தூற்றியவர்களோ தம்மை ஆபத்தில் ஆளாக்கிக் கொள்வர். அவர்கள் அல்லாஹ்வின் பெரும் கோபத்திற்கு ஆளாகுவர்.*

*உள்ள)வர்களும் ஆவார்கள். அவர்கள்தான் நயவஞ்சகிகள். யார் சுவனத்துள் புகுவார்களோ அவர்கள் தூசு படிந்த காகங்களைப் போலாவார்."*[27]

தூசு படிந்த காகத்திற்கு சிகப்பு சொண்டும் சிகப்புக் கால்களும் இருக்கும். இது ஓர் உருவகமாகும். இவ்வுருவகம் மூலம் பெண்களுள் சிலரே சுவனம் புகுவர் என எடுத்துக் காட்டப் படுகின்றது. ஏனெனில், இத்தகைய காகங்கள் மிக அரிதானவையே.

## 7 - தபர்ருஜ் வெட்கக் கேடானது!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" أيما امرأةٍ وضعت ثيابها في غير بيت زوجها ، فقد هتكت ستر ما بينها وبين الله عز وجل "

***"யாரேனும் ஒரு பெண் தனது கணவனின் இல்லத்திலன்றி மற்ற இடங்களில் (முறையற்ற விதத்தில் தன்னைக் காட்டிக்கொள்ள) தனது ஆடைகளை களைவாளாயின் அவள் அல்லாஹ்விடமிருந்துள்ள பாதுகாப்புக் கேடயத்தை உடைத்தவள் ஆவாள்."***[28]

இமாம் அல் மன்னாவி (ரஹ்) அவர்கள் கூறுவதாவது:

*"யாரேனும் ஒரு பெண் தனது கணவனது இல்லத்திலன்றி தனது ஆடைகளை களைவது" என நபி (ஸல்) அவர்கள் மொழிவதன் பொருள் என்னவென்றால், "தனது ஆடைகள் மூலமான பாதுகாப்பை நீக்கி அந்நியவர்க்குத் தன் அழகைக் காட்டுவது" என்பதாகும். அவள் "அல்லாஹ்வுடனான தனது பாதுகாப்பை நீக்கிக் கொண்டவள் ஆவாள்." ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்: "ஆதமுடைய மக்களே! நாம் உங்களுக்கு உங்கள் மறைவான பகுதிகளை மறைத்துக் கொள்ளவும், அழகாக அணிந்து கொள்ளவுமென ஆடைகளை அளித்துள்ளோம். எனினும், தூய்மை எனும் ஆடையே (உங்களுக்கு) மிகச் சிறப்பானது" என்று.*

***எனவே, அல்லாஹ்வின் மீது அச்சமின்றி தமது மறைவான பகுதிகளை மறைக்காதிருப்பின் அத்தகையவர்கள் கண்ணியமிக்க அல்லாஹ்வுடனான பாதுகாப்பை விட்டு நீங்கியவர்களாகி***

---

*27. அல் பைஹக்கீ தனது சுனனில் (Vol:7 பக். 82) இதை அறிவிக்கின்றார். அபூ அந்நசம் தனது 'அல் ஹிலிய்யாத்' (Vol:8 பக்: 376) நூலிலும் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவித்ததாக பதிவு செய்துள்ளார். அல் பானியின் 'நல்ல ஹதீஸ்களின் தொடர்..' (அரபி) 1849யும் 632யும் பார்க்கவும்.*

*28. இமாம் அஹ்மத் அறிவிக்கும் இந்த ஹதீஸை அல் ஹாக்கிம் தனது 'முஸ்தத்ரக்' (அரபி) நூலில் (Vol:4 பக்:288) பதிவு செய்துள்ளார். இது புகாரி, முஸ்லிம் கிரந்தங்களின்படி 'உண்மையான ஹதீஸ்' எனவும், 'அத்தஹபி, இப்னுமாஜாஹ் ஆகியோர் இதனுடன் உடன்பாடு கொண்டுள்ளார்' எனவும் கூறுகின்றார்.*

*விடுகின்றார்கள். அதோடு, அவர்கள் தமதுடலில் மறைக்க வேண்டிய பகுதிகளை மறைக்காதும், மரியாதையின்றியும் இருப்பதன் மூலம் தமது கணவர்க்குத் துரோகம் இளைப்பதால் அல்லாஹ்வின் பாதுகாப்பை இழந்து விடுகின்றனர். மேலும், அவமானமும் அவர்களை வந்தடைகின்றது.''*

## 8 – தபர்ருஜ் நெறி தவறியதும் வெட்கக் கேடானதுமான பாவமாகும்!

பெண் மறைப்பிற்குரியவள். (அவளது முகம், கைகள் சிலருக்குத் தெரிவதைத் தவிர)[29] முழு உடலும் வெளியில் காட்டுவதற்குரியது அல்ல. எனவே, அவள் தனது உடலழகையும் அமைப்பையும் வெளிக்காட்டவென ஆடை அணிவது வெட்கக் கேடான செயலே. அல்லாஹ் இத்தகைய வெட்கக் கேடான பாவத்திலிருந்து ஒதுங்கி இருக்கும்படி தனது அடியார்க்கு அறிவுறுத்துகின்றான்:

﴿ وإذا فعَلُوا فاحِشَةً قالوا وجَدنا علَيها آباءَنا وا للهُ أمَرَنا بِها قُل إنَّ ا للهَ لا يأمُرُ بالفحشاء أتَقُولُونَ على ا للهِ ما لا تَعلَمون ﴾ [ الأعراف ، الآية ٢٨ ]

*அவர்கள் ஏதேனும் மானக்கேடான செயலைச் செய்தால், ''இப்படித்தான் எங்கள் மூதாதையர் வாழக் கண்டோம்'' என்றும், ''இவ்வாறு செய்யுமாறு அல்லாஹ்தான் எங்களுக்குக் கட்டளையிட்டான்'' என்றும் கூறுகிறார்கள். நீர் கூறும்: ''அல்லாஹ் மானக்கேடானவற்றைச் செய்யும்படி எப்போதும் கட்டளையிடுவதில்லை. எவற்றைக் குறித்து (அவை அல்லாஹ் கூறியவை தானா என்பதை) நீங்கள் அறியமாட்டீர்களோ அந்த விஷயங்களையா அல்லாஹ்வின்மீது ஏற்றிச் சொல்கிறீர்கள்?''*

*(அல் குர்ஆன் 7 : 28)*

உண்மையில் ஷைத்தானே அத்தகைய பாவகரமான செயல்களைச் செய்யும்படி தூண்டுதல் அளிக்கின்றான்.

அல்லாஹ் கூறுவதைக் கவனியுங்கள்:

﴿ الشَّيْطَانُ يَعِدُكُمُ الفَقْرَ ويأمُرُكُمْ بالفَحْشَاءِ ﴾

*''ஷைத்தான் வறுமையைக் கொண்டு உங்களை அச்சுறுத்துகின்றான்; மானக் கேடானவற்றைச் செய்யும்படியும் உங்களை ஏவுகிறான்.''*

*(அல் குர்ஆன் 2 : 268)*

*29. அடுத்து வரும் பக்கங்களில் விளக்கங்கள் பார்க்க முடியும்.*

முதபர்ரிஜாஹ் என்பது பாவங்களைப் பரப்பும் ஒரு விஷக் கிருமியாகும். அது முஸ்லிம் சமுதாயத்தினுள் வெட்கக் கேடான பாவங்களை பரப்பும் தன்மை உடையதே.

அல்லாஹ் எச்சரிக்கை செய்கின்றான்:

﴿ إنَّ الَّذينَ يُحِبُّون أن تشيعَ الفاحِشةُ في الَّذين أمنوا لَهم عذابٌ أليمٌ في الدُّنيا والأخِرَةِ وا لله يعلَمُ وأنتم لا تعلَمون ﴾ [ النور، الآية ١٩ ]

***"இறை விசுவாசம் கொண்டோரிடையே மானக்கேடான செயல் பரவிட வேண்டுமென எவர்கள் விரும்புகின்றார்களோ, அவர்கள் இம்மையிலும் மறுமையிலும் துன்புறுத்தும் தண்டனைக்கு உரியவர்களாவர். மேலும், அல்லாஹ் அறிகின்றான்; நீங்கள் அறிவதில்லை."***

***(அல் குர்ஆன் 24 : 19)***

உண்மையில், தபர்ருஜ் என்பது ஷினா (தவறான ஆண் பெண் உற)வுக்கான பிரதான காரணியாகும்.

## 9 – தபர்ருஜ் ஷைத்தானிய வழிமுறையாகும்!

ஆதம் ஹவ்வா இருவரது வாழ்வில் நிகழ்ந்த அனைத்தும் அல்லாஹ்வின் விரோதியான ஷைத்தானின் சதிகளுக்குச் சான்றாய் அமைகின்றன. அவன் அவர்களிடம் தமது மறைவான பகுதிகளை வெளிக்காட்டும் ஆர்வத்தைத் தூண்டி, தீமையும் வெட்கக் கேடானதுமான பாவங்கள் பரவச் செய்தான். அதோடு, ஒரு பெண்ணின் தபர்ருஜைத்தான் ஷைத்தான் தனது தீய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கான ஆரம்ப அம்சமாகக் கொள்கிறான் என்பதும் அறிய முடிகின்றது.

அல்லாஹ் இவ்வாறு எச்சரிக்கின்றான்:

﴿ يا بَني ءَادَمَ لا يفتِنَنَّكُمُ الشيطانُ كما أخرجَ أبَوَيْكم مِّنَ الجَنَّةِ ينزِعُ عنهُما لِباسَهُما لِيُرِيَهُمَا سَوءاتِهِماَ ﴾ [ الأعراف ، الآية ٢٧ ]

***"ஆதத்தின் மக்களே! எவ்வாறு ஷைத்தான் உங்கள் தாய் தந்தையரை சொர்க்கத்திலிருந்து வெளியேற்றினானோ, மேலும், அவர்களுடைய வெட்கத் தலங்களை பரஸ்பரம் வெளிப்படுத்திட வேண்டும் என்பதற்காக அவர்களுடைய ஆடைகளைக் களைந்தானோ அவ்வாறு மீண்டும் உங்களை அவன் குழப்பத்தில் ஆழ்த்திட வேண்டாம்."***

***(அல் குர்ஆன் 7 :27)***

இதிலிருந்து தபர்ருஜ் மீதான அழைப்பை உருவாக்கி, அலங்காரங்களை வெளிக்காட்டும் தன்மையைக் கொண்டுவந்தவன் ஷைத்தான் தான்

என்பது தெளிவாகின்றது. 'பெண்கள் விடுதலை' என்ற பெயரில் தவறின்பால் அழைப்பு விடுக்கும் தலைவர்களுக்கெல்லாம் தலைவன் அவனே. எவர்கள் கருணை மிகுந்த அல்லாஹ்வைப் புறக்கணித்துவிட்டு ஷைத்தானுக்குக் கீழ்ப்படிந்து அவனைப் பின்பற்றுகின்றார்களோ அவர்களுக்கு அவனே 'இமாம்' (தலைவன்) ஆவான். ஒட்டுமொத்தமாகக் கூறுவதாயின், எவர்கள் முஸ்லிம்களைக் கெடுத்து, அவர்களது சந்ததியினரையும் தவறான வழியில் இட்டுச் செல்ல முனைகின்றார்களோ அவர்களுக்கு ஷைத்தானே வழிகாட்டியாவான்.

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" ما تركتُ بعدي فتنة هي أضر على الرجال من النساء"

***''நான் எத்தகைய ஃபித்னாவை (தீங்கை)யும் விட்டுச் செல்லவில்லை, பெண்கள் மூலம் ஆண்களுக்கு ஏற்படும் ஃபித்னாவை (தீங்கைத்) தவிர.''*** [30]

ஆதம் (அலை) அவர்கள் மறதியின் காரணமாக ஒரு தவறைச் செய்தார். அதற்காகப் பச்சாதாபப்பட்டு அல்லாஹ்விடம் மன்னிப்பை வேண்டி நின்றார். மன்னிக்கும் தயாளத் தன்மையுடைய அல்லாஹ்வும் அவரது வேண்டுதலை ஏற்றுக் கொண்டான். ஆயினும் பிரச்சினை தீரவில்லை. ஆதமுக்கும் ஷைத்தானுக்கும் இடையிலான போர் தொடர்கின்றது. அவன் இன்றும் ஆண்கள் பெண்கள் யாவரையும் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவிடாது பாவத்தில் ஈடுபடத் தூண்டுகின்றான். அவனது முயற்சிகளிலிருந்து எம்மைப் பாதுகாத்துக்கொள்ள அல்லாஹ்விடம் தஞ்சம் புகுவதைத் தவிர வேறு வழியேயில்லை. அல்லாஹ்வை உறுதியாக விசுவாசித்து, எம் பாவ செயல்களுக்காக பச்சாதாபப்பட்டு பாவ மன்னிப்பு வேண்டி நிற்பதும், அவன் நினைவில் திளைத்து நிற்பதன் மூலம் கெட்ட உணர்வுகள், எண்ணங்கள், ஆசைகள் ஆகியவற்றிலிருந்து எம்மைப் பாதுகாத்துக் கொள்ள அவனையே நாடி நிற்பதும் மிக மிக அவசியம்.

உண்மையில், இஸ்லாம் வகுத்தளித்துள்ள ஒழுக்க வாழ்வை அச்சொட்டாகப் பின்பற்றி, எம் யாவரையும் நெறிப்படுத்திக் கொள்வதே ஈருலக விமோசனத்திற்கான வழியாகும்.

## *10 – தபர்ருஜ் யூதர்கள் வழிமுறையாகும்!*

நாடுகள் பலவற்றின் அழிவுக்கும் இழிவுக்கும் பெண்களைத் தீமைமிக்கக் கருவியாகப் பயன்படுத்தியவர்கள் யூதர்கள். தமது (யூத) நிறுவனங்களைப் பரவலாக்கிப் பயன் பெறுவதற்கு தபர்ருஜை ஒரு சக்திமிக்கக் கருவியாகக் கொண்டு பரப்பினர். இந்தத் துறையில் இவர்களுக்கு விசேட பயிற்சியும் அனுபவமும் உண்டு. ஒருவர் தனது கண்களை சற்று அகல விரித்து உலகை நோக்கினால் திரைப்பட உலகமான ஹாலிவுட்டையும், அழிவைத் தரும்

*30. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கில மொழிபெயர்ப்பு / தாருல் அரேபியா வெளியீடு)* Vol:4, *ஹதீஸ் 6603, பக் 1431.*

அமைப்புக்களையும், பிரபல்யமிக்க நவ நாகரிக இல்லங்களையும், செல்வாக்குமிக்க சஞ்சிகைகளையும், விளம்பரத் துறையையும் செய்தி நிறுவனங்களையும் யார் நடத்துகின்றனர் என்பதைப் புரிந்துகொள்ள முடியும்; பாரிய தீமைகளுக்கு வித்திடும் திரைப் படங்கள், ஆடை அணிகலன்கள் என்பன யார் கரங்களுக்குள் இருக்கின்றன என தெரிந்துகொள்ள முடியும்!

நபி(ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" فاتّقوا الدنيا ، واتّقوا النساء ، فإن أولَ فتنةِ بني إسرائيل كانت في النساء "

***"இவ்வுலக வாழ்வையிட்டு எச்சரிக்கையாய் இருங்கள். (அதன் தூண்டுதலில் இருந்து உங்களைக் காத்துக் கொள்ளுங்கள்.); பெண்களின் கவர்ச்சியைத் தவிர்த்து கொள்ளுங்கள். நிச்சயமாக, பனூ இஸ்ராயிலிய மக்களுக்கான முதற் சோதனை பெண்கள் மூலமே ஏற்பட்டது."*** [31]

அவர்களது கிரந்தங்களும் இக்கூற்றுக்கு ஆதாரமாகின்றன. இதோ கவனமாகப் படியுங்கள்:

***"பின்னும் கர்த்தர் சொல்லுகிறதாவது: சீயோன் குமாரத்திகள் அகந்தையாயிருந்து, கழுத்தை நெறித்து நடந்து, கண்களால் மருட்டிப் பார்த்து, ஒய்யாரமாய் நடந்து, தங்கள் கால்களில் சிலம்பு ஒலிக்கத் திரிகிறார்கள். ஆதலால் ஆண்டவர் சீயோன் குமாரத்திகளின் உச்சந்தலையை மொட்டையாக்குவார்; கர்த்தர் அவர்கள் மானத்தைக் குலைப்பார்."***

***(ஏசாயா 3 : 16,17)***

இன்னும் படியுங்கள்:

***"அந்நாளிலே ஆண்டவர் அவர்களுடைய ஆபரணங்களாகிய சிலம்புகளையும், சுட்டிகளையும், பிறைச்சிந்தாக்குகளையும், ஆரங்களையும், அஸ்தகடகங்களையும், தலை முக்காடுகளையும், சிரபூஷணங்களையும், பாதசரங்களையும், மார்க்கச்சைகளையும், சுகந்த பரணிகளையும், தாயித்துகளையும், மோதிரங்களையும், மூக்குத்திகளையும், விநோத வஸ்திரங்களையும், சால்வைகளையும், போர்வைகளையும், குப்பிகளையும், கண்ணாடிகளையும், சல்லாக்களையும், குல்லாக்களையும், துப்பட்டாக்களையும் உரிந்து போடுவார்."***

***(ஏசாயா 3 : 18-23)***

---

31. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கில மொழி பெயர்ப்பு/தாருல் அரேபியா வெளியீடு) Vol:4, ஹதீஸ் 6606, பக் :1432.

'காஃபிர் (விசுவாசிகளல்லாதவர்)களின் அடிச்சுவட்டைப் பின்பற்றாதீர்கள். அவர்களது வாழ்க்கை வழிமுறைகளை, குறிப்பாக அவர்களது பெண்களின் நடையுடை பாவனைகளை உங்களுக்குரியதாக ஆக்கிக் கொள்ளாதீர்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் என்னதான் எச்சரிக்கை செய்திருந்தாலும், பல முஸ்லிம்கள் அதை கவனத்தில் கொள்வதில்லை.[32]

இதோ நபி (ஸல்) அவர்களின் எச்சரிக்கை:

" لتتبِعَنَّ سنَنَ من كـان قبلكـم شـبرا بشـبر وذراعـا بـذراع ، حتى لـو دخلـوا جحـر ضـب لَتَبعتُموهُم ، قيل : اليهود والنصارى ؟ قال : فمن؟ "

***நீங்கள் உங்கள் முன்னோர்களின் வழிமுறைகளை அங்குலத்திற்கு அங்குலம், அடிக்கு அடி பின்பற்றுவீர்கள். எந்த அளவுக்கெனில் அவர்கள் ஓர் உடும்புப் பொந்துக்குள் புகுந்தால் அதிலும் புகுமளவுக்கு (நீங்கள் அவர்களைப் பின்பற்றுவீர்கள்.) (அப்பொழுது நபித் தோழர்களான) நாம் கேட்டோம்: "யா ரஸூலுல்லாஹ்! யகூதிகளையும் நஸாராக்களையுமா நீங்கள் குறிப்பிடுகின்றீர்கள்!" என்று. "(இந்த இரண்டு மதத்தார்களைத் தவிர) வேறு யாரை (நான் குறிப்பிடுகின்றேன்!)?" என நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்."[33]***

---

*32. நாம் வருந்தக்கூடிய விஷயம் என்னவெனில் சிற்சில விடயங்களில் காஃபிரை விரும்பாத பலர், உலகாயத முன்னேற்ற விவகாரங்களில் அவர்களைப் பின்பற்றாது எதுவும் சாத்தியமாகாது எனக் கருதுகின்றனர். அதனால் அந்தக் காஃபிர்கள் எவ்வாறு நடிக்கின்றனரோ, ஆடை அணிகின்றனரோ, உண்ணுகின்றனரோ, பருகுகின்றனரோ, அங்கங்களை அசைத்து நடக்கின்றனரோ, உறங்குகின்றனரோ.... அவ்வாறெல்லாம் நடக்க முற்படுகின்றனர். இது தவறான வழிமுறை. முஸ்லிம்களின் எல்லா விதமான முன்னேற்றங்களும் அவர்கள் உலகுக்கு வந்த நோக்கத்திக்கமையவே இருக்கவேண்டும் என்பதை அவர்கள் மறக்கக் கூடாது. எமது எல்லாச் செயல்களும் அல்லாஹ் அனுமதித்த முறைகளுக்கு உட்பட்டிருக்க வேண்டும். காஃபிர்கள் அல்லாஹ் படைத்த பலவற்றை தமது உலகாயத தேவைகளை மட்டும் நிறைவுசெய்துகொள்ள பயன் படுத்துகின்றனர். நாம் அப்படி இருக்கக் கூடாது. மாறாக, எமது படைப்பின் நோக்கம் அறிந்து, அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு அடிபணிந்து, வாழ்வை ஓர் இபாதத்தாகக் கருதி நடத்திச் செல்ல முற்பட வேண்டும். நாம் அல்லாஹ்வின் கட்டளைகளைப் பின்பற்றுவதா? அல்லது காஃபிர்களின் வழிமுறைகளைப் பின்பற்றுவதா? சிலர் அல்லாஹ் அனுமதித்த முறைப்படி ஆடை அணியும்போது வேறு பலர் அவ்வாறு செய்யாதிருப்பது ஏன்? எமது எல்லாச் செயல்களும் அல்லாஹ்வின் திருப்தி உண்டா இல்லையா என்பதைப் பொறுத்தே அமைகின்றது என்பதை நாம் மறக்காது செயல்பட வேண்டும். வெற்றி அதில்தான் உண்டு.*

*33. இந்த ஹதீஸ் புகாரி, முஸ்லிம் உட்பட மற்றவர்களாலும் அறிவிக்கப்படும் பிரபலமான ஒன்றாகும். இங்கு தரப்பட்டுள்ளது ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கில மொழிபெயர்ப்பு) நூலில் வந்ததே. Vol. 4, ஹதீஸ் 6448, பக்:1403.*

அல்லாஹ்வுக்கும் நபி (ஸல்) அவர்களுக்கும் கீழ்ப்படியாத பெண்கள் யூதர்களுக்கு ஒப்பானவர்களே. காரணம், அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு அவர்கள் அளிக்கும் இடமும் அந்தஸ்தும் யூதர்களின் போக்குக்கு சமமானதாகும்.

யூதர்கள் கீழ்க்கண்டவாறு கூறியதாக அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:

﴿ قالوا سمعنا وعصينا ﴾

*"நாங்கள் செவியேற்றோம்; ஆனால், மாறு செய்வோம்!"*

**(அல் குர்ஆன் 2:93)**

ஆனால், விசுவாசிகளான பெண்கள் அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு அளித்த இடமும் அந்தஸ்தும் இவர்களது போக்கில் இருந்து வேறுபட்டது; தனியானது; சிறப்பானது.

அல்லாஹ்வே அது பற்றி குறிப்பிடுகின்றான்; அவர்களுக்கு ஏதேனும் கட்டளை இடப்பட்டால்:

﴿ وقالوا سمعنا وأطعنا ﴾

*"நாங்கள் செவியேற்றோம்; அடிபணிந்தோம்!" எனக் கூறுவார்கள்*

**(அல் குர்ஆன் 2:285)**

யார் இறைவழிக்கு மாறாக நடக்கின்றாரோ அவரின் நிலை என்ன என்பதை அல்லாஹ் தெளிவு படுத்தி எச்சரிக்கை விடுத்துள்ளான்:

﴿ ومن يُشاقِق الرَّسولَ من بعدِ ما تبيَّن له الهُدى ويَتَّبِع غيرَ سبيلِ المؤمنينَ نُوَلِّهِ ما تَوَلَّى ونُصلِهِ جهنَّمَ وساءت مصيرا ﴾

*"மேலும், தனக்கு நேர்வழி தெளிவாகிவிட்ட பின்னரும், எவன் இறை தூதரிடம் பகைமை காட்டுவதில் முனைப்பாக இருக்கின்றானோ, இறை நம்பிக்கையாளரின் போக்கிக்கு மாறான பாதையில் செல்கின்றானோ, அவனை அவன் திரும்பிவிட்ட திசையிலேயே நாம் செலுத்துவோம்; பின்னர் நரகத்தில் வீசி எறிவோம். அது மிகக் கெட்ட தங்குமிடமாகும்."*

**(அல் குர்ஆன் 4 : 115)**

## *11 - தபர்ருஜ் அசங்கியமான ஓர் அறியாமை!*

அல்லாஹ் அறிவு புகட்டுகின்றான்:

﴿ وقَرْنَ في بُيوتِكُنَّ ولا تَبَرَّجنَ تَبَرُّجَ الجاهِليَّةِ الأُولى ﴾

*"மேலும், உங்களுடைய வீடுகளில் தங்கியிருங்கள். முந்தைய அஞ்ஞான காலத்தைப் போன்று ஒப்பனையையும் ஒய்யாரத்தையும் காட்டிக்கொண்டு திரியாதீர்கள்."*

**(அல் குர்ஆன் 33 : 33)**

நபி (ஸல்) அவர்கள் அறியாமை காலத்தை அசங்கியமானதும், கெட்டதுமானதெனக் குறிப்பிட்டு, அதை நிராகரிக்கும்படியும் குறிப்பிட்டு நின்றார்கள்.

அல்லாஹ் நபிகளாரைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகின்றான்:

﴿ وَيُحِلُّ لَهُمُ الطَّيِّبَاتِ وَيُحَرِّمُ عَلَيْهِمُ الخَبَائِثَ ﴾

***"மேலும், அவர்களுக்குத் தூய்மையானவற்றை ஆகுமாக்குகின்றார்; தூய்மையில்லாதவற்றைத் தடை செய்கின்றார்."***

*(அல் குர்ஆன் 7 : 157)*

ஜாஹிலிய்யா (அறியாமை)க் காலத்தின்பால் விடுக்கப்படும் அழைப்பிற்கும் தபர்ருஜ்பால் விடுக்கப்படும் அழைப்பிற்கும் இடையில் சமமானதொரு தன்மை இருக்கின்றது. இவையிரண்டும் மிகக் கெட்ட அழைப்புக்கள் என வர்ணித்த நபி (ஸல்) அவர்கள், இவற்றைக் 'கூடாது' என்றார்கள்; தடை செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு நவின்றார்கள்:

" كل شيء من أمر الجاهلية موضوع تحت قَدَمَيَّ "

***"ஜாஹிலிய்யத்தின் (அறியாமையின்) அனைத்து அம்சங்களும் என் கால்களின் கீழ் இருக்கின்றன!."*** [34]

தபர்ருஜும் ஜாஹிலிய்யத்தின் (அறியாமையின்) வழி சார்ந்த மமதை, இறுமாப்பு, அல்லாஹ்வைப் பற்றிய கெட்ட தவறான எண்ணங்கள், தவறின்பால் விடுக்கப்படும் அழைப்பு, வட்டிக் கொடுக்கல் வாங்கல் போன்ற எல்லா வகையான தீமைகளும் ஒன்றையொன்று சேர்ந்தவையாகவே உள்ளன.

## *12 - தபர்ருஜ் மிருகத்தனமானது; அழிவையும் இழிவையும் பின்னேற்றத்தையும் தருவது!*

எதையும் பட்டவர்த்தனமாக வெளியில் தெரியும்படி காட்டிக் கொள்வதும், செயற் படுவதும் மிருகங்களின் இயற்கையான தன்மை. ஒரு மனிதன் இந்த மிருக உணர்வுக்கு இணக்கமாகச் செயற்பட முனையும்போது அல்லாஹ் அவனுக்கு வழங்கியுள்ள மனிதத்துவ அந்தஸ்திலிருந்து கீழ்நிலைக்கு செல்ல முற்படுகின்றான் என்பது கருத்தாகும்.

அல்லாஹ் எல்லா ஆண்களுக்கும் பெண்களுக்கும் தமது உடலை மறைத்துக் கொள்வது, பேணிப் பாதுகாத்துக் கொள்வது, கண்ணியத்தை இழந்திடாது தற்காத்துக் கொள்வது போன்றவற்றிற்கான இயற்கையான மனச் சார்பு நிலையை ஏற்படுத்தியுள்ளான். இந்நிலையில், ஒருவர்

---

*34. அபூதாவுத், அத்திர்மிதி, இப்னுமாஜாஹ், அத்தாரமீ, இமாம் அஹ்மத் ஆகியோர் அறிவித்துள்ளார்கள்.*

இவற்றைக் கவனத்தில் கொள்ளாது மாறாக நடப்பாராகில், அவர் இயற்கைக்கு முரணாக நடக்கின்றார் என்றுதான் கூற வேண்டும். அதன் இயற்கையான பயன் யாதெனில் அழிவும் இழிவும் வருவதாகும்.

மனித நாகரிகத்தின் முன்னேற்றம் சகல ஆண்களும் பெண்களும் தமது உடலை மறைக்கும் தன்மையுடன் இறுக்கமான தொடர்பைக் கொண்டுள்ளது. உடலை மறைத்தல் எப்பொழுதும் முன்னேற்றத்தின் வெளிப்பாடாகவே இருந்துள்ளது. ஹிஜாப் அணிவதற்கான வெட்க உணர்வு சார்ந்த மனோ நிலை ஆன்மிக வலிமையின் மூலம் பெறப்படுகின்றது. அதேவேளை, 'மறைத்தல் எனும் சங்கிலியை அறுத்துக்கொண்டு விடுதலையை நோக்கிப் பயணம்' வைப்பதானது - தபர்ருஜ், ஆண் பெண் கலப்பு போன்றவற்றிலிருந்து உருவாகும் கெட்ட உணர்வு, கீழ்த்தரமான ஆசை, தவறான பாலுணர்வு ஆகியவற்றிலிருந்து பிறந்ததாகும்.

யாரேனும் ஒருவர் இத்தகைய மனோ நிலைக்கு இலக்காகி அதன் மூலம் திருப்தியுறுவதற்கும், அவை மூலம் கிடைக்கும் கீழ்த்தரமான அற்ப இன்பத்தை சுவைக்க ஆவல் கொண்டு நடப்பதற்கும், அவர் தனது வெட்க உணர்வை அர்ப்பணிக்க வேண்டும்; ஒழுக்கம், பண்பாடு, தூய்மை ஆகியவற்றைத் துறக்க வேண்டும்.

இவற்றின் இறுதி விளைவு பயங்கர அழிவும் இழிவும் பின்னேற்றமுமே. இன்றைய உலகின் பல நாடுகள் இவற்றிற்குச் சான்றாக அமையப் பெற்றுள்ளன என்பதை நாம் காணலாம்.

## *13 - தபர்ருஜ் பாவங்களை கட்டவிழ்த்துவிடும் பாதையாகும்!*

நீங்கள் மிக அவதானமாக இஸ்லாத்தின் மூலாதாரங்களை (குர்ஆன் சுன்னா ஆகியவற்றை)ப் படியுங்கள்; வரலாறை உற்று நோக்குங்கள். அப்பொழுது தபர்ருஜினால் உலகில் விளைந்த பாவங்கள், மத உலகாயத விவகாரங்களில் நிகழ்ந்துவிட்ட அக்கிரமங்கள், குறிப்பாக ஆண் - பெண் கலப்பினால் அப்பாவங்களும் அக்கிரமங்களும் பன்மடங்காகியமை ஆகியன உங்களால் காண முடியும்.

அவற்றுள் சிலவற்றை இங்கு குறிப்பிடுவது தகும் என நினைக்கின்றேன்:

(அ) பெண்களின் அழகை காட்சிக்கு வைப்பதிலான (அழகு ராணி) போட்டித் தன்மை: இது நெறி தவறிய ஒரு செயல். இதன் மூலம் ஒழுக்கம் அற்றுப் போய்விடும். அதோடு, பெண் ஒரு வியாபாரப் பொருளாக மாறி, பலரது பார்வைக்கு இலக்காகி, பாரிய தீமைகளுக்கு வித்திடுவதாகவே அமையும்.

(ஆ) ஆண்களின், குறிப்பாக இளைஞர்கள், வளரும் பருவத்தினரின் ஒழுக்கம் கெடுதல்: இது இவர்களை பல்வேறு தீமைகள்பால்

தூண்டுவதாகவே அமைகின்றது.[35]

(இ) குடும்ப இணைப்பை அறுத்து, குடும்ப உறுப்பினரிடையே நம்பிக்கை இன்மையைத் தோற்றுவிக்கின்றது; அதோடு விவாகரத்துகளையும் அதிகரிக்கச் செய்து அழிவை உண்டு பண்ணுகின்றது.

(ஈ) விளம்பரம், களியாட்டம், திருவிழாக்கள் போன்ற பலவற்றில் பெண்கள் விலை (விளம்பர)ப் பொருட்களாக்கப்பட்டு மிகவும் தவறான முறையில் பயன்படுத்தப்படுகின்றனர்; இதனால் பாரிய பிரச்சினைகள் உருவாகின்றன.

(உ) பெண்களின் உள்ளத்தில் மறைந்திருக்கும் தீய எண்ணங்கள், பாவகரமான உணர்வுகள் ஆகியவற்றைத் தூண்டி அவர்களுக்கு அநியாயம் புரிவது. அவர்களது கண்ணியத்திற்கும் கௌரவத்திற்கும் தீயவர்கள் மூலம் தீமை நேர வழி வகுப்பது.

(ஊ)பாரிய நோய்கள் பரவச் செய்தல்:

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" لم تظهرِ الفاحِشَةُ في قومٍ قَط حتى يُعلِنوا بها إلاّ فشا فيهُم الطاعون والأوجاعُ التي لم تكُن في أسلافِهِم الذين مَضَوْا "

***"குறிப்பிட்ட ஒரு சமூகத்தில் பாவங்களில் வெளிப்படையாகவே ஈடுபடாத வரையில், அவை பரவுவதில்லை. அவைகளால் ஏற்படும் விளைவு என்னவெனில், அவர்களது முன்னோர்கள் காலத்தில் இராத பிளேக் போன்ற கொடிய நோய்கள் அவர்கள் மத்தியில் பரவுவதாகும்."***[36]

(எ) கண்கள் ஊடான விபச்சாரத்திற்காக வசதிகளை செய்து கொடுத்தல்.

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" العَينَان زِنَاهُما النظَر "

***"கண்கள் ஊடான விபச்சாரம் இச்சையுடன் நோக்குவதாகும்!"***[37]

---

*35. ஐரோப்பிய, வட அமெரிக்க நகரத் தெருவோரங்களில் இளம் பருவத்தினர் அரை நிர்வாண கோலத்தில் ஒன்றுகூடி புகைப்பது, போதைப் பொருள் பாவிப்பது, பாலியல் சேட்டைகளில் ஈடுபடுவது என்பன சர்வ சாதாரணமாகிவிட்டவை. இவை என்ன? நடப்பது என்ன? பலரும் இவை சார்ந்த உண்மைகளை மறைக்க முயலுகின்றனர்; உலக வாழ்வில் ஆசை கொண்டு அற்பத்தனமாக நடக்கின்றனர். இது புதிய தலைமுறையினரின் - பெப்ஸி - மைக்கல் ஜெக்ஸன்களின் - இறைவனாக இருக்கின்றது. இதனால் ஆன விளைவு என்ன? அழிவும் இழிவும், எய்ட்ஸும் ஸிபிலிஸும், பாலியல் தொந்தரவுகளும் கற்பழிப்பும், முறை தவறிப் பிறக்கும் குழந்தைகளும் அல்லவா!*

*36. இப்னு மாஜாஹ், அபூ நசம், அல் ஹக்கிம் ஆகியோர் அறிவிக்கும் நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியே இது. இதன் அறிவிப்பாளர்கள் வரிசை சிறப்பானது என இவர்கள் அறிவிக்கின்றனர். அத்தகபி அல் ஹக்கிமின் கூற்றுடன் இணங்கி வருகின்றார்.*

*37. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கிலம்)* Vol: 4, *ஹதீஸ் 6421, பக்:1347.*

(ஏ) தபர்ருஜானது உற்று நோக்குவதை (பார்வையைத் தாழ்த்துவதை) குறைப்பதற்கு கஷ்டமான நிலையை உருவாக்கும்: முஸ்லிம்கள் தமது பார்வையைத் தாழ்த்த வேண்டும் என கட்டளையிடப் பட்டுள்ளது. அல் குர்ஆனின் (24 : 31) கட்டளையைப் பார்க்கவும். ஆயினும், தபர்ருஜ் அந்தக் கட்டளைகளை நிராகரித்து, எதிர்த்து செயற்படவே தூண்டுகின்றது.

(ஐ) அல்லாஹ்வின் தண்டனையைக் கொண்டு வருவது: அல்லாஹ்வின் தண்டனையானது அணுகுண்டை விடவும், பூமியதிர்ச்சியை விடவும் பயங்கரமானது; பாதகமான விளைவைத் தருவதுவாகும்.

அல்லாஹ் எச்சரிக்கின்றான்:

﴿ وإذآ أردنا أن نُهلِكَ قريةً أمَرنا مُترفيها فَفَسَقُواْ فيها فَحقَّ عليها القَولُ فدمَّرناها تدميراً ﴾

***"நாம்[38] ஓர் ஊரை அழித்திட நாடினால் அங்கு சொகுசாக வாழ்வோருக்கு நாம் கட்டளை இடுகின்றோம்; அவர்கள் அங்கு (இக்கட்டளைக்கு) மாறு செய்யத் தலைப்படுகின்றார்கள். அப்போது தண்டனைக்குரிய தீர்ப்பு அவ்வூராரின்மீது விதிக்கப்பட்டு விடுகின்றது. ஆகவே, அதனை நாம் அழித்தொழித்து விடுகின்றோம்."***

*(அல் குர்ஆன் 17: 16)*

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

إنَّ النَّاسَ إذا رأوا المُنكرَ فَلَم يُغيِّروهُ أوشَكَ أن يَعُمَّهُم الله بعذاب

***"மனிதர்கள் தீமையைக் கண்டு அதை (அவர்கள்) தடுக்கவில்லையாயின், அது அல்லாஹ்வுடைய தண்டனை அனைவருக்கும் பொதுவாகவே வரும் என்பதற்கோர் அடையாளமாகும்."[39]***



---

*38. 'நாம்' என பன்மையாக மொழிதல்: ஏக இறைவனான அல்லாஹ்வின் மேன்மையையும் வலிமையையும் வலியுறுத்தவே இவ்வாறு மொழியப் படுகின்றது. ஸெமிதிய* (Semitic) *மொழி மரபில் பேரரசர்கள் போன்றோரை முன்னிறுத்தி பேசும்போது இவ்வாறு மொழிவது பொதுவானதே.*

*39. அபூதாவுத், திர்மிதீ, இப்னுமாஜாஹ், இமாம் அஹ்மத் ஆகியோர் இந்த ஹதீஸை அறிவிக்கின்றார்கள்.*

# ஹிஜாப் அணிபவர்கள் கவனிக்க வேண்டிய அவசியமான அடிப்படை விதிகள்!

## 1 - உடலை முழுமையாக மறைத்தல்!

'ஹிஜாப் நோக்கித் திரும்பிவிடல் - பகுதி 3' நூலின் ஆசிரியர் தனது நூலில் விவரித்துள்ளவாறு பெண்கள் தமது முகம், கைகள் ஆகியனவும் மறைக்க வேண்டும் என்ற கருத்தைக் கொண்டுள்ளார். சில அறிஞர்கள் ஒரு பெண் தன் மூலமோ அல்லது தனக்கு மற்றவர்கள் மூலமோ ஃபித்னா எனும் தீங்கு ஏற்படாத நிலையில், தனது முகம் கைகள் ஆகியனவற்றை மறைக்காது இருக்கலாம் என்ற கருத்தைக் கொண்டுள்ளனர். எனினும், ஓர் அழகான பெண், தனது முகம் கைகள் ஆகியனவற்றை வேறு பொருட்களால் மேலும் அழகு படுத்துகின்றாள். அத்தகைய அவள் வாழும் சமூகம் கெட்டு, அந்த மக்களின் பார்வை, பேச்சு, நடத்தையும் கெட்டிருக்குமாயின், அந்த கட்டத்தில் அவள் தனது முகம் கைகள் ஆகியனவற்றை மறைக்காது இருப்பது தடைசெய்யப் படுகின்றது.

## 2 - ஹிஜாப் ஒரு காட்சிப் பொருளாகக் கூடாது!

ஹிஜாப் ஒரு காட்சிப் பொருளின் தன்மையைப் பெறக்கூடாது. பெண்களின் அழகை மறைக்கவே அல்லாஹ் அதைக் கடமையாக்கினான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ ولا يُبدينَ زينتَهُنَّ إلاّ ما ظَهَرَ منها ﴾

*''தங்களுடைய அழகை வெளியில் காட்டாதிருக்கட்டும்; அதிலிருந்து தாமாக வெளியே தெரிகின்றவற்றைத் தவிர!''*

*(அல் குர்ஆன் 24 : 31)*

﴿ وقَرْنَ في بُيوتِكُنَّ ولا تَبرَّجنَ تَبرُّجَ الجاهِلِيَّةِ الأُولى ﴾

*"மேலும் உங்களுடைய வீடுகளில் தங்கியிருங்கள்; முந்தைய அஞ்ஞானக் காலத்தைப் போன்று ஒப்பனையையும் ஒய்யாரத்தையும் காட்டிக்கொண்டு திரியாதீர்கள்."*

*(அல் குர்ஆன் 33 :33)*

அல்லாஹ்வின் இக்கூற்றுக்கள் எம் கவனத்திற்குரியன. எனவே, எக்கட்டத்திலும் ஹிஜாப்பை அலங்காரக் காட்சிக்குரிய ஒன்றாக அமைத்துக் கொள்வது நியாயமான புத்திக்கு ஏற்புடையதாக இல்லை என்பதை எம் எண்ணத்தில் கொள்ள வேண்டும்.

## 3 – ஹிஜாப் மெல்லியதாக அன்றி கனமாக இருத்தல் வேண்டும்!

ஹிஜாப் அணிவதன் உண்மையான நோக்கம் நிறைவேற வேண்டும். அவ்வாறின்றி, பெண்ணின் உடலமைப்பு வெளியே தெரியக்கூடிய முறையில், பெயருக்கு மெல்லிய துணியால் ஹிஜாப் அணிவதில் அர்த்தமே இல்லை. அது ஹிஜாப் அணிந்த நிர்வாண நிலை என்றுதான் குறிப்பிட வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

"سيكون في آخر أمتي نساءٌ كاسياتٌ عارياتٌ ، على رُؤوسهنَّ كأسـنمة البُخـت ، إلعنوهُـنَّ فإنَّهُنَّ ملعونات "

"எனது சமூகத்தில், பிந்திய கால கட்டமொன்றில், பெண்கள் ஆடை அணிந்தும் (உண்மையில்) நிர்வாணமாக இருப்பர்; அவர்களது தலைகளின் மேல் ஒட்டகங்களின் திமில் போன்றவை (தலைமுடி வைக்கப்பட்டு) இருக்கும். அவர்களை சபியுங்கள். நிச்சயமாக அவர்கள் சபிக்கப்பட வேண்டியவர்களே."[40]

அவர்கள் மீண்டும் மொழிந்தார்கள்.

زاد في حديث آخر :

" لا يدخُلْنَ الجنّة ولا يجدن ريحها ، وإنَّ ريحها ليوجد من مسيرة كذا وكذا "

*"இவர்கள் சுவனத்துள் பிரவேசிக்க மாட்டார்கள்; (அம்மட்டல்ல) சுவனத்தின் நறுமணத்தை நுகரக்கூடிய அளவு அருகில் இருந்த போதிலும், அதனை அவர்கள் நுகரும் வாய்ப்பைப் பெற மாட்டார்கள்."*[41]

---

*40. அடிக்குறிப்பு எண் 24 ஐப் பார்க்கவும்.*

*41. அடிக்குறிப்பு எண் 25 ஐப் பார்க்கவும்.*

இக்கூற்றுக்களிலிருந்து ஓர் உண்மையை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும். அதாவது எந்தப் பெண் மெல்லிய, உடலமைப்பு அப்படியே தெரியக்கூடிய ஆடை அணிகின்றாளோ, அந்தப் பெண் தன்னளவில் ஒரு பெரும் பாபத்தைச் செய்கின்றாள்; அதன் மூலம் ஆபத்தில் மாட்டிக் கொள்கின்றாள் என்பதே அவ்வுண்மையாகும்.

## *4 - ஹிஜாப் இறுக்கமாக அன்றி பெரிதாக, தாராளமானதாக இருக்க வேண்டும்!*

ஹிஜாப் தீமைகளிலிருந்து பாதுகாப்பை வழங்கும் ஒரு சாதனமே. இந்நிலையில், அது இறுக்கமாக இருக்குமாயின், அதன் உண்மையான நோக்கம் நிறைவேற மாட்டாது. அவ்வாறு அணிந்தும் பெண்ணின் உடலமைப்பு வெளியே தெரியுமாயின், அது ஹிஜாபின் வரம்பை மீறிய செயலாகும்.

உஸாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:

قال أسامة بن زيد رضي الله عنهما : كساني رسول الله -صلى الله عليه وسلم- قُبطِيَّه كثيفه مما أهداها له دِحية الكلبي ، فكسوتها امرأتي ، فقال " ما لك لم تلبس القبطية ؟ " قلت : كسوتها امراتي ، فقال : " مُرْها فلتَجعل تحتها غُلالة وهي شعار يلبس تحت الثوب فإني أخاف أن تصف حجم عظامها "

*"நபி (ஸல்) அவர்கள் துஹியா அல் கல்பி என்பவரிடம் இருந்து பரிசாகக் கிடைத்த கனமான குப்திய்யாஹ் (பருத்தியிலான எகிப்திய) ஆடை ஒன்றை எனக்குத் தந்தார்கள். நான் அதை என் மனைவி அணிவதற்கென அவருக்குக் கொடுத்தேன். (அது பற்றி நபி (ஸல்) அவர்கள், "நீர் ஏன் அந்த குத்பிய்யாஹ்வை அணியவில்லை" எனக் கேட்டார்கள். நான் அதை என் மனைவிக்குக் கொடுத்ததாகக் கூறினேன். (அப்பொழுது) அவர்கள், "(அதை அணியும்போது) அதனுள்ளே ஓர் உள்ளாடை அணிந்து கொள்ளும்படி கட்டளை இடும். ஏனெனில், அவளது உடலமைப்பு (வெளியில்) தெரியக் கூடியதாக அமைந்து விடுமோ என நான் அஞ்சுகிறேன்."*[42]

*42. இந்த ஹதீஸை அத்தியா அல் மக்திஸ்ஸி, இமாம் அஹ்மத், அத் தபரானி, அல் பைஹகி, இப்னு ஸஅத் ஆகியோர் அறிவிக்கின்றனர். "இதன் அறிவிப்பாளர் வரிசையில் அப்துல்லாஹ் இப்னு அகீல் அவர்களும், அவர்களது அறிவிப்புகளும் நல்லன. ஆயினும் சில அறிஞர்களது கருத்துப்படி அவரில் பலயீனம் இருப்பதாகவும், மற்ற அறிவிப்பாளர்களைப் பொறுத்தமட்டில் அவர்களது அறிவிப்பில் நம்பிக்கை கொள்ள முடிகின்றது" எனவும் அல் ஹைஹத்தமி கூறுகிறார் என அறிவிக்கப் படுகின்றது. அத்தஹபி, "அப்துல்லாஹ் பின் அகீலின் அறிவிப்பின் தரம் 'நல்லது' எனக் கூறும் தரத்தை விடத் தாழ்ந்தது அல்ல" என்கிறார். ('மீஸான் அல் இஃதிதால்' எனும் அரபு நூல்.)*

## 5 – ஹிஜாபில் மணம் பூசக் கூடாது!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" إنما امرأةٌ استعطَرَت ، فمرّت على قومٍ ليجِدوا ريحها ، فهي زانية "

***"ஒரு பெண் மணம் பூசி அதன் வாடையை மக்கள் நுகரும் வகையில் அவர்களைக் கடந்து போவாளாயின் அவள் ஒரு விபச்சாரியாவாள்."[43]***

## 6 – ஹிஜாப் ஆண்களின் ஆடையை ஒத்திருக்கக் கூடாது!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" ليس منّا من تشبه بالرجال من النساء ، ولا من تشبه بالنساء من الرجال "

***"ஆண்களைப் போன்று ஆடை அணியும் பெண்களும், பெண்களைப் போன்று ஆடை அணியும் ஆண்களும் நம்மைச் சார்ந்தவர்கள் அல்லர்."[44]***

அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

" لعن رسول الله –صلى الله عليه وسلم– الرجل يلبس لبسة المرأة والمرأة تلبس لبسة الرجل "..

***"நபி (ஸல்) அவர்கள், பெண்களுக்குரிய ஆடைகளை அணியும் ஆண்களையும், ஆண்களுக்குரிய ஆடைகளை அணியும் பெண்களையும் சபித்தார்கள்."[45]***

நபி (ஸல்) அவர்கள் மீண்டும் நவின்றார்கள்:

---

43. இந்த ஹதீஸை இமாம் அஹ்மத் , அந்நிஸாஈ ஆகியோர் அறிவிக்கிறார்கள். இதனை அறிவிக்கும் மற்றொருவரான அல் ஹக்கீம், "இதற்கு ஆதாரபூர்வமான அறிவிப்பாளர் வரிசையுண்டு" என்கிறார். அத்தஹபி இதில் இணங்கியுள்ளார்.

44. இந்த ஹதீஸை இமாம் அஹ்மத், அபூ நுஐம் ஆகியோர் அறிவிக்கின்றார்கள். அல் அல்பானி தனது 'ஹிஜாப்' எனும் நூலில் (பக். 66, 67) அதை ஆதாரபூர்வமானதாக ஏற்றுக் கொண்டுள்ளார்.

45. இதனை அபூதாவுத், இப்னு மாஜாஹ், அல் ஹக்கீம், இமாம் அஹ்மத் ஆகியோர் அறிவிக்கின்றார்கள். "இமாம் முஸ்லிமின் கருத்துப்படி இது ஆதாரபூர்வமானது" என அல் ஹக்கீம் கூறுகிறார். அத்தஹபி இதை சரி கண்டுள்ளார். இமாம் அந்நவவியும் இதை ஆதாரபூர்வமானதாக ஒப்புக் கொண்டுள்ளார்.

" ثلاث لا يدخلون الجنّة ، ولا ينظر الله إليهم يوم القيامة : " ألعاق والديه ، والمـرأة المترجلـة المتشبهة بالرجال ، والدّيّوث "

*"மூவர் சுவனத்துள் புகுவது இல்லை; அல்லாஹ் மறுமை நாளில் அவர்களை ஏறெடுத்துப் பார்ப்பதும் இல்லை. (அவர்கள் யாரெனில்), தனது பெற்றோரைப் பொறுத்த வரையில் கடமைத் தவறியவன், ஆண்களைப் போன்று ஆடையணிந்து அவர்களின் குணப் பண்புகளை ஒத்து நடக்கும் பெண், தனது மனைவி விபச்சாரத்தில் ஈடுபடுவதை அறிந்துகொண்டே அதைக் கவனத்தில் கொள்ளாதிருப்பதுடன் அதற்குதவுபவன் (ஆகியோராவர்.)"* [46]

## 7 - ஹிஜாப் காஃபிரான (முஸ்லிமல்லாத) பெண்களின் ஆடைகளை ஒத்திருக்கக் கூடாது!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" من تشبه بقوم فهو منهم "

*"எவன் எந்த சமூகத்திற்கு ஒப்பானவனாக இருக்கின்றானோ அவன் அவர்களைச் சார்ந்தவனாவான்."* [47]

அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:

وعن عبد الله بن عمرو–رضي الله عنهما قال : " رأى رسول الله –صلى الله عليه وسلم – عَلَيَّ ثوبين مُعصفرين ، فقال : " إن هذه من ثياب الكفار ، فلا تلبسها "

*"நான் மஞ்சள் நிறத்திலான இரண்டு ஆடைகள் அணிந்திருப்பதை நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள். அப்போது அவர்கள் மொழிந்தார்கள்: "இந்த ஆடைகள் காஃபிர்கள் (முஸ்லிமல்லாத வர்கள்) உடைய (வழமையாக அணியும்) ஆடைகள். எனவே, அவற்றை அணியாதீர்" என்று."* [48]

---

46. இதனை அந்நிஷாஈ, இமாம் அஹ்மத், இப்னு குஸைய்மா, இப்னு ஹிப்பான் ஆகியோர் அறிவித்துள்ளனர். அறிஞர் அஹ்மத் ஷாகிர் ஆதாரபூர்வமானது எனக் கூறியுள்ளார்.

47. அபூதாவுத், அஹ்மத் (மற்றொரு ஹதீஸின் ஒரு பகுதியாக) ஆகியோர் அறிவித்துள்ளனர். இப்னு தைமிய்யா இதற்கு ஆதாரபூர்வமான (அபூதாவுத் அறிவித்தது) அறிவிப்பாளர் வரிசை இருப்பதாகவும், "நல்ல ஹதீஸ்" எனவும் கூறுகிறார்; அஸ்ஸுயூத்தி இதனை 'ஹஸன் - நல்லது' என்கிறார்; இப்னு ஹஜர் இதனை ஃபதஹுல் பாரியில் அறிவித்து, நல்ல அறிவிப்பாளர் வரிசையைக் கொண்டு ஆதாரப் படுத்தியுள்ளார்.

48. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கிலம்) Vol. 3, ஹதீஸ்: 5173.

## 8 – ஹிஜாப் புகழுக்காக அணிவதல்ல!

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" من لبسَ ثوب شهرةً في الدنيا البسه ا لله ثوب مذلةٍ يوم القيامة ، ثم ألهب فيه ناراً "

***''உலக ஆசையை ஏற்படுத்தக்கூடிய ஆடையை எவன் அணிகின்றானோ அவனுக்கு அல்லாஹ் மறுமை நாளில் இழிவான ஆடையை அணிவிப்பான். பின்னர் அவன் நெருப்பிலிடப் படுவான்.''[49]***

ஓர் ஆணோ ஒரு பெண்ணோ தன்னைப் பிரபல்யப் படுத்திக்கொள்ள அணியும் எந்த ஆடையையும் 'புகழுக்காக அணியும் ஆடை' எனக் குறிப்பிடலாம். ஓர் ஆடை உயர்ந்த விலை உடையதாகவும், இவ்வுலக வாழ்வை பெருமைக்கும் பாராட்டுக்கும் ஆக்கும் வகையிலும் தெரிவு செய்யலாம். அல்லது, இவ்வுலக வாழ்வில் அதிக அக்கறை கொள்ளாத வகையிலான சாதாரண தரமுடையதான தெரிவாகவும் இருக்கலாம். ஒருவர் பல வண்ண நிறங்களுடைய ஆடைகளை அணிந்து மற்றாரின் கவனத்தை ஈர்க்கவோ, பெருமையுடன் நடக்கவோ, கர்வம் கொள்ளவோ செய்யலாம்.

உண்மையில் அல்லாஹ்வுக்காகத் தெரிவுசெய்யும் ஆடையே சிறப்பானது. அது இவ்வுலக வாழ்வில் ஒழுக்கத்தையும், தூய்மையையும், நல்ல வாழ்வையும் தருகின்றது. மறுமையிலோ அதற்குக் கிடைக்கும் வெகுமதிகள் அளவிட முடியாதனவாகும்.

## 9 – மறைவான கவர்ச்சிக் காட்டல்!

ஹிஜாப் பற்றி இதுவரை கூறிய விவரங்களிலிருந்து அதன் வரையறைகள் நிபந்தனைகள் என்ன என்பதை வாசகர்கள் புரிந்திருப்பர். எனினும், துரதிஷ்டம் என்னவெனில், இளம் முஸ்லிம் பெண்களுள் பலர் இந்த வரையறைகளையோ நிபந்தனைகளையோ பேணி நடப்பதில்லை என்பதுதான். அவர்கள் இப்போது அணிவதை 'ஹிஜாப் என தவறாக எண்ணிக் கொண்டுள்ளனர். இஸ்லாமிய எழுச்சியை விரும்பாதவர்களும், இஸ்லாத்தின் எதிரிகளும் அதனை ஆரம்ப நிலையிலேயே கொடூரமான முறையில் அடக்கியொடுக்கி நசுக்கிவிட முனைந்தனர். ஆனால், அல்லாஹ் அவர்களது அந்தச் சதி முயற்சிகளைத் தோல்வியுறச் செய்து, விசுவாசிகளான ஆண்களையும் பெண்களையும் தனக்குக் கீழ்ப்படிந்து நடப்பதில் தீவிரமாக இருக்கச் செய்தான்.

---

*49. இதனை அபூதாவுத், இப்னுமாஜாஹ் இருவரும் அறிவிக்கின்றனர். அல் முந்தரியும் இப்னு மஃப்லிஹூம் இதை 'ஹஸன் - நல்லது' எனக் கூறுகின்றனர். இமாம் அல்ஸவ்கானி ''இதன் அறிவிப்பாளர்கள் நம்பிக்கைக்குரியவர்கள்'' என்கிறார். அல் அல்பானி தனது 'ஹிஜாப்' (பக். 110) நூலில் 'ஹஸன் - நல்லது' என அறிவிக்கின்றார்.*

எனவே, இஸ்லாத்திற்கு எதிரான நேரடி சதி முயற்சிகளால் அதை ஒடுக்க முடியாது என உணர்ந்த எதிரிகள் மாற்று வழியைக் கைக்கொள்ள திட்டமிட்டனர். அத்தகைய சூழ்ச்சிகள் நிறைந்த வழியில் தான் அல்லாஹ்வின் திருப்தியை நாடிய இஸ்லாமிய இலட்சியப் பயணத்திலிருந்து முஸ்லிம்களைத் திசை திருப்பிவிட முடியும் என அந்த எதிரிகள் எண்ணினர்.

அதன் விளைவாக, புதுமை கலந்த, திருத்தங்களுக்கு உள்ளான ஒரு வகையான 'ஹிஜாப்'பை அவர்கள் அறிமுகப் படுத்தினர்; ஒரு பக்கத்தில் 'ஹிஜாப் அணிகின்றோம்!' என்ற மனோநிலையை வளர்த்து, ஏதோ ஒரு வகையில் அல்லாஹ்வைத் திருப்தி படுத்துவதாகக் கருதவும், மறு பக்கத்தில் தமது சமூகத்துடன் ஒத்துப் போகும் வகையில் தமது அழகை, வசீகரத்தை, கவர்ச்சியை காட்டிக் கொள்ளவுமான ஒரு நடுவழித் தீர்வை பெண்களுக்கு வழங்கினர்.

எனினும், உண்மையான இஸ்லாமிய ஹிஜாப் படிப்படியாக பரவலாக முற்பட்டதன் காரணமாக நவீன வர்த்தக நிலையங்களிலான வர்த்தகத்தில் தேக்க நிலை உண்டானது. உடனே 'தபர்ருஜ்' மாதிரியில் அமைந்த மாற்று ஹிஜாப்கள் 'நவீனகரமானவை, சமகாலத்தவை' என்ற பெயரில் அணையுடைந்த வெள்ளம் போல் சந்தைக்கு வரலாயின. ஆரம்ப கட்டத்தில் இதற்கு எதிர்ப்பு தெரிவிக்கப் பட்டது; பெண்கள் எச்சரிக்கை அடைந்தனர்!

அதேவேளை, இஸ்லாமிய ஹிஜாப் காரணமாகக் கலவரமடைந்திருந்த சங்கடத்திற்கு ஆளான 'கவர்ச்சிப் பாவைகள்' குழுவொன்று ஹிஜாபின் உண்மையான வடிவம் பரவியதால் விளைந்த சமூகத் தாக்கத்திலிருந்து தங்களை தற்காத்துக் கொள்ள 'நவீன ஹிஜாபை' நாடினர். காலப்போக்கில் இந்த அதிசய 'மறைவான கவர்ச்சிக் காட்டல்' வழிமுறை 'நவீன ஹிஜாப்' என்ற பெயரில் பரவலாயிற்று. இந்த நவீன ஹிஜாபுடன் இணக்கமான பெண்கள், "நாமே மிகச் சிறந்த பெண்கள்; மிகச் சிறந்த மனைவியர்!" என நினைக்கலாயினர்!

எனினும், ஒரு கவிஞரின் கருத்தில் அவர்கள் நிலை இதுதான்:

*"ஹிஜாபுடன்*

*அவர்கள் உறவு கொள்ளும்போது*

*அழைப்பின்றி*

*உறவுக்கு வந்தவர் போலாவர்!"*

எனவே, இவ்வாறான தன்மையுடைய பெண்களே! எவர்கள் தமது உண்மையான தீய எண்ணங்களை மறைத்துக்கொண்டு, வெளியில் உங்களது செயல்களைப் பாராட்டுகின்றார்களோ அவர்களுக்கு ஏமாறாதீர்கள்; அல்லாஹ்வையும் அவன் தூதரையும் உள்ளத்தில் கொள்ளுங்கள். அதோடு, 'முழுமையாகத் தன்னை அழகுபடுத்திக் காட்டித்

திரிபவர்களைவிட நான் எவ்வளவோ மேல்!' என்ற எண்ணத்தைக் கொண்டு ஏமாறவும் வேண்டாம். உண்மையில், பாப காரியங்களுக்கு மன்னிப்பு கிடையாது. நரக நெருப்பைப் பொறுத்த வரையில் அதில் வித்தியாசமான வேதனைத்தரும் தாழ்ந்த படித்தரங்கள் இருப்பது போலவே, சுவர்க்கத்திலும் சுகம் தரும் பல உயர்ந்த படித்தரங்கள் உள்ளன என்பதை நாம் அறிவது அவசியம். ஆகவே, இஸ்லாமிய ஹிஜாபை அதன் சரியான வரையறைகள், நிபந்தனைகள் ஆகியன முறையாக அறிந்து நடக்கும் உங்கள் சகோதரிகளைப் பின்பற்றுவதே உங்களுக்கு சிறந்தது.

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

" انظروا إلى من هو أسفل منكم في الدنيا ، وفوقكم في الدين ، فذلك أجدر أن لا تزدروا- أي تحتقروا-نعمة الله عليكم "

***''உலக விவகாரங்களில் உங்களைவிடத் தாழ்ந்தவர்களைப் பாருங்கள். மார்க்க விவகாரங்களில் உங்களைவிட உயர்வானவர்களைப் பாருங்கள். அது அல்லாஹ் உங்கள்மீது சொரிந்துள்ள அருட்கொடைகளில் குறைகாணாது இருப்பதற்கு சிறந்த வழியாகும்.''***[50]

உமர் இப்னுல் கத்தாப் (ரலி) அவர்கள் கீழ்க்காணும் மறை வசனத்தை ஓதியதாக 'அஷ்ஷுஹ்ரி' அறிவிக்கின்றார்.[51]

﴿ إنَّ الذينَ قالوا ربُّنا الله ثُمَّ استقاموا تَتَنَزَّلُ عليْهِمُ الملائكةُ ألاَّ تَخافُوا ولا تَحزَنوا وأبشِروا بالجَنّةِ الّتي كُنْتُم تُوعَدون ﴾

***''எவர்கள் 'அல்லாஹ் எங்கள் இறைவன்' என்று கூறி, பின்னர் அதில் உறுதியாக நிலைத்து நின்றார்களோ திண்ணமாக, அவர்கள் மீது வானவர்கள் இறங்குகிறார்கள். மேலும், அவர்களிடம் கூறுகின்றார்கள்: ''அஞ்சாதீர்கள்! கவலைப் படாதீர்கள்! உங்களுக்கு வாக்களிக்கப் பட்டிருக்கும் சுவனத்தின் நற்செய்தியினால் மகிழ்ச்சியடையுங்கள்!''***

***(அல் குர்ஆன் 41:30)***

பின்னர் அவர் கூறினார்:

فقال : " استقاموا والله لله بطاعته ، ولم يروغوا روغان الثعالب "

---

*50. இந்த ஹதீஸின் மூல அறிவிப்பு அல் புகாரியின் 'ரிகாக்' பாடத்திலும், முஸ்லிமின் அஷ்ஷுஹ்த் பாடத்திலும் (ஆங்கிலம் Vol : 4, ஹதீஸ்: 7070, பக்: 1530), அத்திர்மிதீயின் கியாமாஹ் பாடத்திலும் இடம் பெற்றுள்ளது.*

*51. இமாம் அஹ்மத் அவர்களின் 'அஷ்ஷுஹ்த்' எனும் நூலில் இமாம் அஹ்மத், இப்னு அல் முபாரக் ஆகியோர் அறிவித்துள்ளனர். (பக். 115, 110 பார்க்கவும்)*

*"அல்லாஹ்வின் மீது ஆணையாக, அவர்கள் அல்லாஹ்வுக்கு அடிபணிந்து அவனது நேரிய வழியைப் பின்பற்றினார்கள். அன்றி (அவர்கள்) ஓநாய்களைப் போன்று பாசாங்கு செய்துகொண்டு இருக்கவில்லை!"*

ஹஸன் அல் பஸரி (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

*"நீங்கள் அல்லாஹ்வுக்கு முற்றிலும் அடிபணிந்து அவன் வழியில் தொடராக செயற்படுவதை ஷைத்தான் கண்ணுற்றால், (உங்களைக் கெடுக்க) வேளைக்கு வேளை வழி தேடுவான். இருந்தும் நீங்கள் உங்கள் நேர்வழியில் உறுதியாக இருப்பதைக் கண்டால் அவன் சோர்ந்து களைப்புற்று உங்களை (க் கெடுக்க எடுக்கும் கெடுமுயற்சிக ளிலிருந்து) நீங்கி விடுவான். எனினும், நீங்கள் ஒருவேளையில் நேர்வழியில் உறுதியாக இருந்து மறுவேளையில் தளர்ந்து விட்டால், அப்பொழுது அவன் வழியில் உங்களை எடுத்துக்கொள்ள ஆவல் கொள்பவனாகி விடுகின்றான்."* [52]

எனவே, எத்தகைய கோணலுமற்ற நேர்வழியின் (இஸ்லாத்தின்)பால் விரைந்து வாருங்கள். பிழையேயில்லாத சரியான - நேரிய வழிகாட்டடல் அதிலுண்டு. தன் பிழைகளை உணர்ந்து பச்சாதாபப்பட்டு வருவோருக்கும் அதில் விடிவு உண்டு.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ وتوبوا إلى الله جميعاً أيّه المؤمنون لعلّكم تفلحون ﴾

*"விசுவாசிகளே! நீங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அல்லாஹ்வின் பக்கம் பாவமன்னிப்புக் கோரி மீளுங்கள். நீங்கள் வெற்றி அடையக் கூடும்."*

*(அல் குர்ஆன் 24 : 31)*



52. இப்னு அல் முபாரக் தனது அஷ்ஷுஹ்த் எனும் நூலின் பக்: 7 எண் 20ல் அறிவிக்கின்றார்.

# செவியேற்போம்; கீழ்ப்படிந்து நடப்போம்!

உண்மையான முஸ்லிம்கள் அல்லாஹ்வின் ஆணைகள் கிடைக்கப் பெற்றவுடன், அவற்றைத் தெளிவாக அறிந்து கொள்ள முற்படுவர்; இஸ்லாத்தின்மீது அளவிலா ஆர்வம்கொண்டு அதன் படி வாழ்வதில் நபி (ஸல்) அவர்களது ஸுன்னாஹ்வைத் தெரிந்து கீழ்ப்படியவும் முற்படுவர். அவர்கள், தமது இறுதி இலக்கைத் தெரியாது பயணம் செய்யும் மக்களின் தவறான, நஷ்டத்தைத் தரும் வழிகளையிட்டு கவனம் செலுத்த மாட்டார்கள். அல்லாஹ், தன்னையும் தன் தூதரையும் விட்டு புறமுதுகுக்காட்டிச் செல்வோரின் நம்பிக்கைகள் அனைத்தையும் செல்லாததாக்கி விட்டான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ ويقُولونَ ءامنّا با للهِ والرَّسُولِ وأطَعْنا ثُمَّ يَتَوَلَّى فَريقٌ مِنهُم من بَعدِ ذلك وما أولئكَ
بالمؤمنين * وإذا دُعُوا إلى ا للهِ وَرَسُولِهِ لِيَحْكُمَ بينَهُم إذا فريقٌ مِنهُم مُعْرِضون ﴾

*"அல்லாஹ்வின் மீதும் தூதர் மீதும் நாம் நம்பிக்கை கொண்டோம்; மேலும், கீழ்ப்படிதலை ஏற்றுக் கொண்டோம்" என்று இவர்கள் கூறுகின்றார்கள். ஆயினும் இதன் பின்னர், இவர்களில் ஒரு பிரிவினர் (கீழ்ப்படியாமல்) புறக்கணித்து விடுகின்றார்கள். இத்தகையோர் எவ்வகையிலும் நம்பிக்கையாளர்கள் அல்லர். அவர்களுக்கிடையிலான வழக்குகளில் இறைதூதர் தீர்ப்பளித்திட வேண்டும் என்பதற்காக அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய தூதரின் பக்கமும் வருமாறு அவர்கள் அழைக்கப் படும்போது அவர்களின் ஒரு சாரார் புறக்கணித்துச் செல்கின்றார்கள்."*

***(அல் குர்ஆன் 24 : 47, 48)***

அதேவேளை, மறுபக்கத்தில் இறை நம்பிக்கையாளரின் தன்மையைப் பற்றி அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்:

﴿ إنّمَا كان قولَ المؤمِنِينَ إذا دُعُوا إلى ا للهِ ورَسُولِهِ لِيَحكُمَ بينَهُم أن يقولوا سمِعنا وأطَعنا ﴾

*“இறை நம்பிக்கை கொண்டவர்கள் தங்களுக்கிடையில் உள்ள வழக்குகளில் இறைதூதர் தீர்ப்பு வழங்கவேண்டும் என்பதற்காக அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய தூதரின் பக்கமும் வருமாறு அழைக்கப்படும்போது, “நாங்கள் செவியேற்றோம்; கீழ்ப்படிந்தோம்!” என்று கூறுவதே அவர்களின் தன்மையாகும். இத்தகையோர்தான் வெற்றி பெறக்கூடியவர்கள். எவர்கள் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படிந்து, அல்லாஹ்வுக்கு அஞ்சி அவனுக்கு மாறு செய்வதைத் தவிர்த்துக் கொள்கின்றார்களோ, அவர்கள்தாம் வெற்றியாளர்களாவர்.”*

*(அல் குர்ஆன் 24 : 51, 52)*

ஸய்பாவின் மகள் ஸஃபிய்யாஹ் கூறினார்:

عن صفية بنت شيبة قالت: بينما نحن عند عائشة رضي الله عنها قالت: فذكرت نساء قريش وفضلهن, فقالت عائشة رضي الله عنها: " إنَّ لنساء قريش لفضلاً ، وإني والله ما رأيتُ أفضل من نساء الأنصار أشدَّ تصديقا لكتاب الله ، ولا إيماناً بالتنزيل ، لقد أُنزِلَت سورة النور: ﴿ وليضرِبنَ بِخُمرِهِنَّ ﴾ ، فانقلب رجالُهُنَّ إليهنَّ يتلون عليهنَّ ما أنزل الله إليهم فيها ، ويتلو الرجل على إمرأته ، وابنته ، وأخته ، وعلى كل ذي قرابته ، فما منهُنَّ إمرأة إلاَّ قامت إلى مِرْطِهَا المُرَحَّلِ فاعتَجَرَت به-تصديقا وإيماناً بما أنزل الله من كتابه ، فأصبَحْنَ وراء رسول الله-صلى الله عليه وسلم-معتجرات كأنَّ على رُؤُوسِهِنَّ الغُربان.

*“நாம் ஆயிஷா (ரலி) அவர்களுடன் இருந்த போது குரைஷ் (குலப்) பெண்களைப் பற்றியும் அவர்களது நற்பண்புகளைப் பற்றியும் சொன்னோம். அப்பொழுது, ஆயிஷா (ரலி) அவர்கள் சொன்னார்கள்: “உண்மையில் குரைஷ் (குலப்) பெண்களிடம் நற்பண்புகள் உண்டு. அதோடு, அல்லாஹ்வின் மீது ஆணையாக, அல்லாஹ்வின் கிதாபை (குர்ஆனை) ஏற்பதிலும், (அவன்) இறக்கியவற்றின் மீது நம்பிக்கை கொள்வதிலும் அன்ஸாரியப் பெண்களை விடவும் வலிமை மிக்கவர்களை நான் காணவில்லை. ‘ஸூரத்துன் னூர் (எனும் அத்தியாயத்தை) இறக்கியருளியபோது,*

﴿ وَلْيَضْرِبْنَ بِخُمُرِهِنَّ عَلَى جُيُوبِهِنَّ ﴾

*“தங்களுடைய மார்புகள் மீது தங்கள் முந்தானையைப் போட்டுக் கொள்ளட்டும்!”*[53]

---

53. அல்குர்ஆன் 24:31

என்ற திருமறை வசனமும் இருப்பதைக் கண்ணுற்ற அவர்களது கணவர்கள், உடனே அவர்கள் பக்கம் திரும்பி அதனை ஓதிக்காட்டினார்கள். அந்த ஆண் தனது மனைவிக்கு, தனது மகளுக்கு, தனது சகோதரிக்கு, அத்துடன் ஒவ்வொரு பெண் உறவினருக்கும் அதை ஓதிக் காண்பித்தார். இதை செவியுற்ற எந்த ஒரு பெண்ணும் விடுபடாது (எல்லோருமே) தங்களுடைய மிர்த் (முந்தானை) களை எடுத்து தமது தலை முகம் ஆகியனவற்றை மறைத்துக் கொண்டனர். அல்லாஹ் தனது வேதவாக்கியங்களை அருளியபோது அவற்றை ஏற்று நம்பிக்கை கொள்ளும் வகையில் இவ்வாறு அவர் (அன்ஸாரியப் பெண்)கள் நடந்து கொண்டார்கள். அடுத்த நாள் காலை நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால், தமது தலைகளுக்கு மேல் கருங்காகங்கள் இருப்பது போல் மறைத்துக்கொண்டு வந்து நின்றனர்.[54]

எனவே, அல்லாஹ்வின் ஆணையை ஏற்பதைவிட மாற்று வழியில்லை; அவனது ஆணைகளைப் பின்பற்றுவதில் சிறிதேனும் தயக்கம் இருக்கக் கூடாது. என்னருமை முஸ்லிம் சகோதரிகளே! பிழைகளை உணர்ந்து பச்சாதாபப்பட்டு, பாவ மன்னிப்பு வேண்டி, மீட்சி பெற வாருங்கள். "நான் பாவ மன்னிப்பு வேண்டி நிற்கின்றேன்; அல்லாஹ்விடம் கையேந்தி நிற்கின்றேன்; ஹிஜாபை முறைப்படி ஏற்று உடலை மறைக்கின்றேன்!" எனக் கூறுங்கள். பாவ மன்னிப்புக் கோரலைத் தாமதப் படுத்துவதும் ஒரு பாவமாகும் என்பதை உணருங்கள்.

மூஸா (அலை) அவர்களின் நாவிலிருந்து அல்லாஹ் வெளிப்படச் செய்த வார்த்தைகளை உங்கள் நாவுகளும் மொழியட்டும்.

இதோ அந்த வார்த்தைகள்:

﴿ وعَجِلْتُ إليْكَ ربِّ لِتَرضى ﴾

*"என் இறைவனே! நான் அவசரமாக உன் திருச்சமூகம் வந்து விட்டிருப்பது நீ என்மீது திருப்திகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான்!"*

*(அல் குர்ஆன் 20 : 84)*

அதோடு, விசுவாசிகளான ஆண்களும் பெண்களும் அளித்த வாக்கைப் போல் உங்கள் வாக்கும் இருக்கட்டும்.

இதோ அந்த அழகிய வாக்கு:

سَمِعنا وأطعنا غُفرانَكَ ربَّنا وإلَيْكَ المصير

*"(எங்கள் இறைவனே!) நாங்கள் செவியேற்றோம்; அடிபணிந்தோம். எங்கள் இறைவனே! நாங்கள் உன்னுடைய மன்னிப்பைக் கோருகிறோம். உன்னிடமே (நாங்கள்) திரும்பி வரவேண்டி இருக்கின்றது!"*

*(அல் குர்ஆன் 2 : 285)*

54. தஃப்ஸீர் இப்னுகஸீர் 5 : 90க்கான விளக்கம்

ⓒ المكتب التعاوني للدعوة والإرشاد بالبديعة : ١٤١٥هـ
فهـرست مكتبة الملك فهـد الوطنية
**إسماعيل محمـــد**
الحجـــاب . . لمـاذا ؟ . ترجمة شريف الدين محمد منصور
٥٦ صفحة ، ١٤ × ٢١ سم .
**ردمك ٤ ــ ٢٠ ــ ٧٩٩ ــ ٩٩٦٠ .**
النص باللغــة التاميلية .
١ ــ الوعظ والإرشاد . ٢ ــ المرأة في الإسلام . ٣ ــ الحجاب والسفور .
( أ ) منصور ، شريف الدين محمد ( مترجم ) .
(ب ) العنـــــوان .

ديـوي ٢١٩,١ ١٥/١٣٣٢

رقم الإيداع : ١٥/١٣٣٢
ردمك : ٤ ــ ٢٠ ــ ٧٩٩ ــ ٩٩٦٠

# الحجاب لماذا ؟

تأليف فضيلة الشيخ
د. محمد بن إسماعيل

ترجمه للتاميلية
شريف الدين منصور



# الحجاب لماذا ؟

تأليف فضيلة الشيخ

**د. محمد بن إسماعيل**

ترجمه للتاميلية

**شريف الدين محمد منصور**

ردمك : ٤ — ٢٠ — ٧٩٩ — ٩٩٦٠

المملكة العربية السعودية — المكتب التعاوني للدعوة والإرشاد بالبديعة

قسم الجاليات — تحت إشراف وزارة الشئون الإسلامية والأوقاف والدعوة والإرشاد

ص.ب ٢٤٩٣٢ الرياض ١١٤٥٦ — ت ٤٣٣٠٨٨٨/٤٣٣٠٤٧٠ — فاكس ٤٣٠١١٢٢ المملكة العربية السعودية